கழக வெளியீடு: ௨௨௫

குமாரகுருபர அடிகள்

அருளிய

# நீதிநெறி விளக்கம்



திரு தி சு பாலசுந்தரம் பிள்ளையவர்கள்
(இளவழகனார்)
உரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.
1965

# பதிப்புரை

நீதிநெறி விளக்கம் என்ற இந்நூல் "உலைவி லாது யாருந் தீதெலா மொருவி நீதியே புரியப்" பயன் படுமாறு, சித்தாந்த சைவமதத்தைச் சார்ந்த குமர குருபர அடிகளாற் பதினேழாம் நூற்றாண்டில் இயற்றப் பட்டதாகும். மிகவும் அருமை வாய்ந்த திருக்குறள் என்னுந் தீந்தமிழ் மறையை யொட்டி, மதுரையரசர் திருமலை நாயகர்தம் விருப்பத்திற்கிணங்கச், சுருக்க மாகவும் தெளிவாகவும் இயற்றப்பட்ட இச் சிறு நீதி நூல் ௧0௨ வெண்பாக்களைக் கொண்டிலகுவதாகும்.

சங்கச் செய்யுட்களோடு ஒருங்குவைத் தெண்ணத் தக்க பெருமை வாய்ந்த இந்நூல் சொற்செறிவும் பொருட்செறிவுமுடையது; பத்தழகும் பண்புற அமைந்தது; சீரிய செந்தமிழ் நடையானியல்வது; வட சொற்கள் பெரிதும் கலவாதது; அணிநலம் பலவுஞ் சிறந்து மிளிர்வது; அறிவிற் சிறந்த தமிழாசிரியர்கள் பலரால் இதற்கு உரைகள் பல இயற்றப்பட்டிருப்பதும், ஆங்கிலேயரை யுள்ளிட்ட அறிஞர் பலரால் இதற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகள் பல செய்யப்பட்டிருப் பதும் இதன் அருமை பெருமைகளுக்குச் சான்றாகும்.

இத்தகைய சிறந்த நூல், ஆசிரியர் மறைமலை யடிகளாரின் மாணவரும், நம் கழகத் தமிழ்ப் புலவரா யிருந்தவருமான இளவழகனார் என்ற திருவாளர்

தி. சு. பாலசுந்தரம் பிள்ளை யவர்கள் அரிதின் முயன்றெழுதிய தெளிபொருள் விளக்கவுரையுடன் நங் கழக வெளியீடாகச் செவ்விய முறையில் இப்பொழுது பன்னிரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது. தமிழ் மக்களும் சைவ நன்மக்களும் மாணவர்களும் இதனை இன்னும் விரைந்தேற்று எம்மை ஊக்குவார்களென்று நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

திருச்சிற்றம்பலம்

# குமரகுருபர அடிகள் வரலாற்றுச் சுருக்கம்

பாண்டி நாட்டிலேயுள்ள ஸ்ரீ வைகுண்டத்திலே சைவ வேளாளர் குலத்திலே சண்முக சிகாமணிக் கவிராயரும் அவர் மனைவியார் சிவகாமி அம்மையாரும் செய்த தவப் பயனாக நன்மகனாரொருவர் பிறந்தார். அம் மகனார் ஐந் தாண்டளவும் பேசாதிருந்தமை கண்ட பெற்றோர் திருச் செந்தூர் சென்று முருகக்கடவுளை வழிபட, அப்பெருமான் அருளால் அம்மகனார் ஊமை நீங்கிச், சைவ சித்தாந்த சாத்திரசாரமாய் விளங்கும் 'கந்தர்கலி வெண்பா' என்னும் பாடலை அப் பெருமான்மீது புகழ் நூலாக அருளிச்செய் தார். முருகக் கடவுள் அவர் கனவிலே குமர வடிவங் கொண்டு தோன்றி, 'நீ குமரகுருபரனாகுக' என்றருளிய தால், அன்று முதலாக அவர் குமரகுருபரரென அழைக்கப் பட்டார்.

முருகக் கடவுள் ஆணைப்படி குமரகுருபரர் ஒரு சமயம் வடதிசை செல்லும்போது மதுரையில், 'மதுரை மீனாட்சி யம்மை பிள்ளைத் தமிழ்' பாட, அக்காலத் தரசராகிய திருமலை நாயகர் மீனாட்சியம்மை யருளால் அதனைத் தெரிந்து அப் பிள்ளைத் தமிழை அம்மை திருக்கோயிலின்முன் அரங் கேற்றுவித்தார். அப் பிள்ளைத் தமிழின் வருகைப் பருவத்து ஒன்பதாவது செய்யுளாகிய, 'தொடுக்குங்கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே' என்று தொடங்குஞ் செய்யுளுக்குக் குமரகுருபரர் பொருளுரைக்கும்போது மீனாட்சியம்மையார் அருச்சகரின் பெண்போலத் திருக் கோலங்கொண்டு அரசர்கழுத்தி லணிந்திருந்த மணிவடத் தைக் கழற்றிக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந் தருளினர். குமரகுருபரர் பின்னர் 'மீனாட்சியம்மை குறம்' மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம்' என்பவற்றையும் அங்கே இயற்றியருளினர்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப்பெருமானை வணங்கித்'திருவாரூர் நான்மணிமாலை' என்னும் நூலைக் குமர குருபரர்பாடினர்; அப்பால் தருமபுரஞ் சென்று அங்கே நான்காவது குருவடிவா யெழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் ஞானவுரை பெற விரும்பி அவராணைப்படி சிதம்பரஞ் செல்லப் புறப்பட்டு வைத்தீசுவரன் கோவில் அடைந்து குமரக்கடவுள்மீது 'முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்' என்னும் நூலை அருளிச் செய்தார். பின் சிதம்பரஞ் சென்று நடராசப் பெருமான்மீது 'சிதம்பர மும்மணிக் கோவை' 'சிதம்பரச் செய்யுட்கோவை' என்னும் இரண்டு நூல்களையும், அம்மைமீது 'சிவகாமியம்மை இரட்டை மணி மாலை' என்னும் நூலையும் தொடுத்தருளினர். பின்பு அவர் தருமபுரஞ் செல்ல, மாசிலாமணி தேசிகர் அவருக்கு ஞான வுரை அருளினர். அக் கருணையை வியந்து தம் ஆசிரியர் மீது 'பண்டார மும்மணிக் கோவை' என்னும் நூலைப் பாடி அதனை அவ்வாசிரியர்க்குக் காணிக்கையாகச் செலுத்தினர்.

பின்னர் அம் மாசிலாமணி தேசிகர் ஆணைப்படி தமக்குத் திருமலை நாயகராற் கொடுக்கப்பட்ட பொருளைக் கொண்டு காசிக்குப்போய், விசுவநாதப் பெருமான்மீது 'காசிக்கலம்பகம்' என்னும் நூலை இயற்றினர். அந்நாட்டு மகம்மதிய அரசனிடம் மடங்கட்ட இடம்பெற விரும்பிக் கலைமகள்மீது 'சகலகலாவல்லி மாலை' பாடி ஏத்தி, அப் பிராட்டியார் அருளால் இந்துஸ்தான் மொழியை யறிந்து, அரசனிடம் சென்று பல அருஞ்செயல்கள் செய்து அவ்வர சனால் இடம் தரப்பெற்றுப் பல சைவ மடங்களும் கேதார நாதர் திருக்கோயிலும் அமைத்தார்.

பின்னர் மூன்றுமுறை தருமபுரம் வந்து தம் ஆசிரி யரை வழிபட்டுப், பின்னும் காசிக்குப்போய்ச் சைவசமய வளர்ச்சி கருதிப் பல நற்றொண்டுகள் புரிந்து விளங்கி, முடிவில் அத்திருப்பதியிலேயே ஒரு வைகாசித் திங்கள் தேய்பிறை மூன்று நாளில் வீடெய்தினர்.

திருச்சிற்றம்பலம்

---

ஓம்

# நீதிநெறி விளக்கம்

## மூலமும் உரையும்



### கடவுள் வாழ்த்து

நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

(பொருள்) இளமை நீரில் குமிழி - இளமைப் பருவம் நீரிலுண்டாகும் குமிழியாகும், நிறை செல்வம் நீரில் சுருட்டும் நெடு திரைகள்-நிறைந்த செல்வம் நீரிலே காற்றினாற் சுருட்டப்படும் உயர்ந்த அலைகளாகும், யாக்கை நீரில் எழுத்து ஆகும்-உடம்பு நீரிலெழுதிய எழுத்தாகும்; (இங்ஙனமிருக்க), நமரங்காள் - நம்மவர்களே !, எம்பிரான் மன்று வழுத்தாது என்னே - நம் கடவுளுடைய மன்றினை (அம்பலத்தை) வாழ்த்தி வணங்காதது ஏனோ?

(விளக்கம்) ஆகும்; கடைநிலைத் தீவகம்;இதைக் குமிழி திரைகள் என்பவற்றிற்குங் கூட்டுக நிலையாமையைக் காட்டுதற்குக் குமிழி, திரை, எழுத்து என்பன உவமிக்கப்பட்டன. அங்ஙனம் உவமிக்கப்பட்டவைகள் மூன்றும் நீரில் நிகழும் நிகழ்ச்சிகளாயிருத்தலின், அந்நீரோட்டத்தை இளமையும் செல்வமும் யாக்கையும் பொருந்திய வாழ்க்கைக்கு உவமித்துக்கொள்க. உவமைகள் உருவகமாக வந்தமையால் கருத்துக்கள் பின்னும் உறுதியாயின ; இளமை எய்திப் பொருள் தொகுத்து உடம்பை விடுதலால் அவை தம்மை அம்முறையே வைத்தார். இளமை, உருத்திரண்டு அழகு கெழுமி இருப்பதுபோல் இருந்து சிறிது காலத்தில் மாறுதற்கும், செல்வம், மிகுந்துங் குறைந்தும் மறைந்தும் எழுந்தும் நீளத் தொடர்ந்தும் தொடராதும் மாறுபடுதற்கும், நன்றாயிருக்கும் உடம்பு சட்டென்று இறத்தற்கும்முறையே குமிழி முதலானவை உவமமாக வந்தன. முகிழ் என்பது சிவிறி; விசிறி, சதை, தசை என்றாற்போல, எழுத்து நிலைமாறிக் குமிழ் என்றாயிற்று. அது வினைமுதற் பொருளதான இகரவிகுதி ஏற்றது. குமிழி, செல்வம்

என்பன, தொழிலடியாகப்பிறந்த பெயர்கள். நெடுந்திரை - உயர்ந்த அலை. என் : எவன் என்பதன் விகாரம். என்னே எம் பிரான் மன்று வழுத்தாதது என்பதற்கு, என்னே கடவுளை வழி படாதது என்னும் பொதுப்பொருள் கொள்க. யாக்கை - தோல் நரம்பு முதலியவற்றாற் கட்டப்படுவது. நமரங்காள்: நமர்கள் என் னும் முறைப் பெயர் ஈற்றயல் அகரம் ஆகாரமாகி, விளியேற்று இடையே அம்சாரியை பெற்றது. வழுத்தாதது : எதிர்மறைத் தொழிற்பெயர்.

இஃது அறிவுரையோடு கூடிய கடவுள் வாழ்த்துச் செய்யு ளென்க. இவ்வாறு கொள்ளும் முறையைத் திருக்குறட் கடவுள் வாழ்த்து அதிகாரத்தான் அறிக.

(கருத்து) இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையாமை யால், அவை உள்ளபொழுதே இறைவனை வழிபட்டுக் கொள்க வென்பது. (க)

கல்வியின் சிறப்பு

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

(பொ - ள்.) அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்- ஒழுக்கமும் செல்வமும் இன்பமும் என்னும் மூன்றையும் வீடு பேற்றையும் கொடுக்கும், புறங்கடை நல் இசையும் நாட்டும் - உலகத்தில் குற்றமற்ற புகழையும் நிலைநிறுத்தும், உறும் கவல் ஒன்று உற்றுழியும் கைகொடுக்கும்-நேரக்கூடிய வருத்தமொன்று நேர்ந்த பொழுதும் கைகொடுத்து உதவிசெய்யும், சிறு உயிர்க்கு உற்ற துணை கல்வியின் ஊங்கு இல்லை - ஆதலால் சிறிய உயிர்க ளாகிய மக்கட்குத் தக்க துணை கல்வியைவிடப் பிறிதில்லை.

(வி - ம்.) வீடு, முதல் மூன்றன் பயனாகலானும் மறுமையில் எய்துதற் குரியதாகலானும் அதனை மட்டும் உம்மைகொடுத்து வேறு பிரித்தார். புறங்கடை-புறத்தில்;புறம்என்றது கற்றறிந்த புலவன் இருக்கும் ஊர்க்குப் புறனாய இடம் என்னும் பொருண் மேல் நின்றது. கடை : ஏழாம்வேற்றுமை யுருபு; அன்றி, இலக் கணப் போலியுமாம். உறுகவல்: முன் வினைப்பயனாகக் கட்டாயம் வந்தே தீருங் கவலைக்கிடமான செய்கை. கவல்: முதனிலைத் தொழிற்பெயர். உழி-பொழுது; இடமுமாம். ஊங்கு: மிகுதிப் பொருள் தருவதோர் இடைச்சொல். சிற்றுயிர்-அறிவிலும் ஆற்ற

விலும்சிறுமையுடைய உயிர், அது மலத்தாற் றொடக்குற்று எங்குஞ் சிறுமையையும் குறித்து நின்றது. துணையாயிருப்பதென்பது உற்றுழி யுதவலாகலின், அவ்வுற்றுழி யுதவலுக்கு வேருக அதனினும் மேம்பட்ட நல்லிசையையும் அறமுதலா நான்கினையும் தர வல்லதாதலால், கல்வி உற்ற துணையாயிற்று. இச் செய்யுளில் உள்ள பயக்கும், நாட்டும், கை கொடுக்கும் என்னுஞ் சொற்கள் மிக்க ஆற்றலுடையவை. பயக்கும் நாட்டும் கொடுக்கும் என்பனவற்றைப் பெயரெச்சமாக்கிக் கல்விக்கு அடைமொழி யாக்கலுமாம். கைகொடுக்கும் - கைகொடு: பகுதி, கைகொடுத்தலாவது இடையே வந்த இடுக்கணைக் கெடுத்துச் செய்யத்தக்கது இதுவென அறிந்து உள்ளம் ஓங்குதற்கு ஏதுவான அறிவினை உண்டாக்குதல். இசையும், உற்றுழியும்: உம்மைகள் இறந்துதழீஇய எச்சப்பொருளன. அறமுதல் நான்கையும் இசையையும் உற்றுழி உதவியையும் செய்ய வல்லது கல்வி என்பதை நாயனுர், முறையே "ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற், கெழுமையும் ஏமாப் புடைத்து"* "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு"† "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை"‡ என்று அருளினுர்.

(க - து.) மக்களாய்ப் பிறந்தார் கல்வியே தக்க துணையென்று நம்பிக் கற்கற்பாலார். (உ)

## கல்வியின் இன்பம்

தோடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடங்கோன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

(பொ - ள்.) முற்றிழாய்-முடிந்த தொழில்களையுடையநகைகளையணிந்த பெண்ணே!, கல்வி-படிப்பு, தொடங்குங்கால் துன்பம் ஆய் இன்பம் பயக்கும்-படிப்பதற்குத் தொடங்குங்காலத்தில் துன்பம் தருவதாகிப் பின்பு இன்பங் கொடுக்கும்; மடம் கொன்று அறிவு அகற்றும்-(அதுவல்லாமலும்) அறியாமையை நீக்கி அறிவைப் பெருகச் செய்யும்; (ஆனல்), நெடு காமம்-மிகுதியான காம ஆசையோ வென்ருல், முன்பயக்கும் சில் நீர இன்பத்தின் - தொடக்கத்தில் தரக்கூடிய சிறுபொழுது இருக்குந் தன்மையவான இன்பத்தைப் பார்க்கினும், பின் பயக்கும் பீழை பெரிது - அவ்வின்ப நுகர்ச்சியின் பின் உண்டாகும் துன்பம் மிகுதியாகும்.

---

* திருக்குறள், கல்வி-அ. † திருக்-கல்வி-எ ‡ திருக்-கல்வி-கo

(வி - ம்.) காமத்தினுல் இன்பம் நுகர்ந்துவரும் மக்களுள் கற்ற லென்பது துன்பமாயிருக்கின்றதே என்று எண்ணுநர்க்கு விடை மொழியாகும் இச் செய்யுள். மடம் - அறியாமை, அது மீண்டும் உண்டாகாதவாறு கல்வி கெடுத்துவிடும் என்பார், 'கொன்று' என்றுர்: 'கற்பக் கழிமட மஃகும்' என்ற நான்மணிக் கடிகைச்செய்யுளும் இக்கருத்துடையது. மடம் நீங்கவே அதனுள் மறைந்து கிடந்த அறிவு எழுந்தது, அங்ஙனம் எழுவித்தலேயன்றிக் கல்வி அதனைப் பெரிதாகவும் விரியச்செய்யும் என்பார், 'அகற்றும்' என்றுர். நெடுங்காமம்—நெடுமை காமம்: நெடுமை-இங்கு மிகுதிப் பொருளது.

(க - து.) காம வின்பத்தினுங் கல்வி யின்பமே சிறந்ததென்பது. (௩)

அவையை அழகுபடுத்துங் கல்வி

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே தீங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

(பொ - ள்.) கல்வியே கற்பு உடைப்பெண்டிர் ஆ-கற்கின்றவர்க்குத் தாம் கற்ற கல்வியே கற்புடைய மனைவியராகவும், அப்பெண்டிர்க்கு தீங்கவியே செல்வப் புதல்வன் ஆ - அம் மனைவியர்க்கு இனிய பாடலே அருமையான புதல்வனுகவும், சொல் வளம் மல்லல் வெறுக்கை ஆ - அப்பாடலின் மொழிவளப்பமே நிறைந்த செல்வமாகவும் இருக்க, மாண் அவை மண்ணுறுத்தும் செல்வமும் சிலர்க்கு உண்டு - மாட்சிமைப்பட்ட அறிஞர் அவையினை அழகு படுத்தும் செல்வாக்கும் சிலரிடத்தில் உள்ளதாம்.

(வி - ம்.) இச் செய்யுளால், கல்வியோடு கூடிய ஒருவன் வாழ்க்கை, சிறந்த மனைவியோடு கூடி இல்லறம் நிகழ்த்தும் ஒருவனது வாழ்க்கையை ஒக்கும் ஒன்பது பெறப்படும். பெண்டிர், புதல்வன், செல்வம் என்பன ஒன்றுக்கொன்று தொடர்புற்று நிற்றல் கண்டுகொள்க. "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு"* என்னுந் திருக்குறளிற்போலக் கல்வி கற்றுெருவன் எவையேனும் இனிய கருத்துடைய நூல்களை இயற்றியிடுதல் வேண்டும்: மகப்பெருப்பெண்டிரோடு கூடுதலிற் பயனில்லையாதல்போல. நூல்களியற்ருக் கல்விப் புலமையும், பயனில்லையாம் என்றபடி. 'ஈர்ங் கவியாம்' எனவும் பாடமுண்டு.

* திருக்குறள், வாழ்க்கைத்துணை நலம், ௧0.

செல்வத்தாற் குழந்தைகளின் உடல் வளமும் உள்ள வளமும் சிறத்தலின் அத்திங்கவிக்குச் சொல்வளமாகிய மல்லல்வெறுக்கை வேண்டுமென்றார். ''மாணவை மண்ணுறுத்தல்'' என்பது பிறர்க்கு அறிவுறுத்தலை உணர்த்திற்று. செல்வமுடையாரினும் சிலர்க்கே ஒப்புரவுச் செவ்வம் இருப்பதுபோலக் கற்றாரினும் சிலர்க்கே அவையை அணிசெய்யும் ஆற்றலுள்ளது. இச்செயல் அரிதாதல் பற்றிச் சிலர்க்கு என்றதுடன் செல்வமும் என்று சிறப்பும்மையுங் கொடுத்தார். ஈண்டுச்செல்வமும் என்பது செல்வாக்கையுணர்த்தும். இனிச், சொல்வளம் என்பதற்கே சொல்வன்மை என்று பொருள் கூறுவாருமுளர். திங்கவியா: கடைக்குறை. ஆக என்பதைப் பெண்டிர்க்குங் கொள்க, இருக்க என்றொரு சொல் வருவிக்க. மண்ணுறுத்தல்-கழுவுதல். இஃது எதிரிருக்கும் அவையினரை அவர் அறியாமையாகிய மாசைத் தன் விரிவுரை நீரால் கழுவி அணிசெய்தலைக் குறித்து நின்றது. இச் செய்யுள் இயைபு உருவகம்.

(க-து.) பிறர்க்கு நூலியற்றற்கும் அறிவுறுத்தற்கும் ஆற்றல் பெருமலும், பெற்றும் அவை செய்யமாட்டாமலும் இருப்பின் கல்வியாற் பயனில்லையென்பது. (௪)

### கல்வியும் உய்த்துணர்வும்

எத்துணை வாயினுங் கல்வி இடமறிந்து
உய்த்துணர்வு இல்லெனின் இல்லாகும்-உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனின் என்னும் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து.

(பொ-ள்.) கல்வி எத்துணைய ஆயினும்-கற்ற கல்வி எவ்வளவு பெரியனவானாலும், இடம் அறிந்து-நூலின் இடந்தெரிந்து, உய்த்து உணர்வு இல் எனின்-ஆராய்ந்து உணரும் உணர்ச்சி இல்லையானால், இல்லாகும்-அக் கல்வி பயனில்லையாகும், உய்த்துணர்ந்தும்-அங்ஙனம் உய்த்துணர்ந்தாலும், சொல்வன்மை இன்று எனின் என் ஆம்-பிறர்க்கு எடுத்துச் சொல்லும் வல்லமை இல்லையென்றால் அக் கல்வியால் என்ன பயனாகும்?, அஃதுண்டேல்-அச்சொல்வன்மை இருக்குமானால், பொன் மலர் நாற்றம் உடைத்து-அதுபொன்னாற் செய்யப்பட்ட மலர் மணம் உடையதுபோலாகும்.

(வி-ம்.) உய்த்துணர்வு என்பதற்கு நல்லாசிரியனைத் தெரிந்து ஆராய்ந்து அறிதலென்று பொருளுரைத்து அதற்கேற்ப எத்துணைய என்பதற்குச் சிறுமைப் பொருளுரைப்பாருமுளர். இல்லாகும், என்னும் என்பன படித்தும் பயனில்லை

என்பதைக் காட்டின; உவமை சிறப்பின்கண் வந்தது. அதற்கு உவம உருபு உரைத்துக்கொள்க. அஃது : இல்பொருளுவமை. கல்விக்கும், அதனைக் கற்பானுக்கும், கற்றதை எடுத்துரைப்பானுக்கும் உள்ள இயைபினை உவமை செவ்விதின் விளக்குகின்றது. 'எத்துணைய தாயினும்' என்பதும் பாடம்.

(க - து.) இடமறிந்து உய்த்துணர்தலும் சொல்வன்மையும் இல்லையானற் கல்வியாற் பயனில்லை. (ரு)

அவையஞ்சுவார் கல்வி

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணர் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

(பொ - ள்.) அவை அஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் - கற்ருர் அவைக்கு அஞ்சி உடம்பு நடுங்குவோருடைய கல்வியறிவும், கல்லார் அவை அஞ்சா ஆகுலச் சொல்லும் - படிக்காதவர்களுடைய அவைக்கு அஞ்சாத ஆரவாரச் சொல்லும், நவை அஞ்சி ஈத்து உண்ணர் செல்வம் - குற்றத்துக் கஞ்சிக் கொடுத்துண்ணுதவர்கள் செல்வமும், நல்கூர்ந்தார் இன் நலமும் - வறியவர்களுடைய ஈகை முதலிய இனிமையான தன்மைகளும், பூத்தலின் பூவாமை நன்று-'ஆக இந்தநான்கு தன்மைகளும்' உண்டாதலைவிட உண்டாகாமலிருத்தலே நன்று.

(வி - ம்.) இஃது அவைக்குச் சென்றும் அதற்கு அஞ்சுவாரைக் குறித்தது. அவையை யஞ்சி என்று இரண்டாம் வேற்றுமையுருபு விரித்தலுமாம். விதிர்த்தல் - உதறல் "மெய்தானரும்பி விதிர்விதிர்த்து"* என்பது திருவாசகம். ஆகுலம் - ஆரவாரம்: "ஆகுல நீர பிற"† என்பதன் உரையை நோக்குக. செல்வமும் இன்னலமும் என்பன உள்ளுறை உவமமாக வந்தன. ஆகுலச் சொல்லும், மெய்விதிர்ப்பார் கல்வியும் பயனில்லை என்பது. இன்னலம் என்றற்கு இனிய அழகு என்றலுமாம். கற்றவர்களிலும், அவைக்கு அஞ்சாதவரே உண்மையிற் கற்றவர் மற்றவர் கற்றுங்கல்லாரே ஆவர், இதனைத் திருவள்ளுவனர், "கற்ருருட் கற்ருர்"‡ என்றும், "கல்லா தவரிற் கடை"§

---

* திருவாசகம், திருச்சதகம், க.
† திருக்குறள், அறன் வலியுறுத்தல், ச.
‡ ,, அவையஞ்சாமை, உ.
§ ,, ,, சு.

என்றுங் கூறுவார். கல்வியின் உண்மையும், இன்மையும் ஒருசேரக் கூறினமையால் இது பழிப்பொப்புமைக் கூட்ட அணி.

(க - து.) கற்றூரவைக்கு அஞ்சுங் கல்வி பயன்படா தென்பது. (சு)

புலவர் புகழ் உடம்பு

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க்கோவ்வான்-மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

(பொ - ள்.) கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும்-கலைமகளினுடைய வாழ்க்கை இருவர்க்கும் தத்தம் முகத்திடத்ததேயானாலும், மலரவன் வண் தமிழோர்க்கு ஒவ்வான்-மலர்மேலிருக்கும் நான்முகன் வளப்பம் பொருந்திய தமிழ்ப் புலவர்களுக்கு ஒப்பாகான், (ஏனென்றால்) மலரவன் செய் வெறு உடம்பு மாய்வனபோல்-மலரவன் செய்கின்ற புகழில்லாத ஊன் உடம்பு அழிந்துபோவனபோல, மற்று இவர் செய்யும் உடம்பு புகழ் கொண்டு மாயா-மற்று இப்புலவர்கள் செய்கின்ற நூலுடம்புகள் புகழைப்பெற்று அழியமாட்டா (ஆதலின் என்க.)

(வி - ம்.) கலை-கற்றலாற் பெறப்படுவது. கலைமகள் நான்முகன் நாவிலும் புலவர்கள் நாவிலும் உறைகின்றாளென்பதை 'முகத்தது' என்றார்; முகத்தது; குறிப்பு முற்று. வெறுமை இலை-வெற்றிலை என்றாற் போல வெறுமை உடம்பு வெற்றுடம்பாயிற்று. பெருமை இல்லாத வெறும் உடம்பு என்பது பொருள். மண் நீர் முதலிய பூதங்களானியன்றமையின் வெற்றுடம்பு மாய்வன; புலவர்கள் செய்யும் நூல் பின்னும் பின்னும் புகழப்படுதலின் மாயா என்றார்; நூலை, உடம்பென்று கூறினார்; "பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போற் பல சொல்லாற் பொருட்கிடனாக.........செய்வது செய்யுள்"* என்பது நன்னூல், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயிருந்த தொல்காப்பியனாரும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயிருந்த திருவள்ளுவனாரும் அருளிச்செய்த தொல்காப்பியம், திருக்குறள் என்னும் இலக்கண இலக்கிய நூல்களாகிய உடம்புகளின் வாயிலாக அவர்கள் செய்து கொண்ட புகழ் இன்றும் அழியாமல் நின்று நிலவுகின்றமையும், ஆனால், மலரவன் செய்த அவரூனுடம்புகள் புகழோடு இக்காலத்திற் காணமுடியாதபடி அக் காலங்களிலேயே மறைந்து

---

* நன், பெயரியல், கக.

போனமையுங் கண்டு கொள்க. இவ்வுண்மையை நாயனர், "கேடில் விழுச் செல்வம்"* என்று உவமாரக் கூறுவர். இவ் வெற்றுடம்பும் புகழுடம்பும்மேல் ௬0 ஆஞ் செய்யுளிலும் வருதல் காண்க. மற்று: பிறிதின்கண் வந்தது. இச் செய்யுள், தொழில் வேற்றுமை யணி.

(க - து.) கல்வியே என்றும் அழியாதது. (எ)

அவையத்து உதவாதார் கல்வி

நெடும்பகற் கற்ற அவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி—கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

(பொ - ள்.) நெடும்பகல்-பல நாளாக, கற்ற-தம்மாற் படிக்கப்பட்ட நூல்கள், அவையத்து-அவையிலே, உதவாது-எடுத்துரைப்பதற்குக் கூடாமல்; உடைந்து உளார் - தோல்வியுற் றிருப்பவருடைய, உட்குவரும் - அச்சத்தைத் தரும், கல்வி-படிப்பானது, கடும்பகல் - நண்பகலில், ஏதிலான்பால் - அயலவ னிடம், கண்ட-வயப்பட்டிருக்கப் பார்த்த, இல்லினும் - மனை யாளைப் பார்க்கிலும், பொல்லாது - தியதாகும்; (ஏனெனில்), தீது என்று - (அவளைத் தியவளென்று நீக்குமாறு போலத்), தன் கல்வியைத் தியதென்று, நீப்பு அரிது-நீத்தற்கு அரிதாதலின் என்பது.

(வி - ம்.) பகல்-நாள். நெடுமை-நீட்சி. கற்ற கல்வி, உட்குவரும் கல்வி என்றும் இயைக்கலாம். கடும்பகல் - பெரிதும் விளக்கமுடைய உச்சிக்காலம். இல்லாள் தற்கொண்டாற் பேணி அறுசுவை உண்டி அமர்ந்து ஊட்ட வேண்டியவளாதலின், அத னைச் செய்யாது, கொண்ட கணவன் காலையில் தொழிலின் பொருட்டு வெளியே வயல் முதலிய இடங்கட்குச் சென்று வியர்த்திளைத்துத் திரும்பியவன் மேலுந் துயருறும்படி அயலவன் அகம் அடைந்திருப்பதுணரின் அத்தகைய மனைமாட்சியற்றாள் தனக்கு நலம் பயவாதவள் என்று விலக்கப்படுதல் கூடும்; ஆனால் கற்ற கல்வி அங்ஙனம் நீக்கப்படுதலும் இயலாதென்பார், 'இல்லி னும் பொல்லாதே' என்றார். பால்: ஏழனுருபு. இல் - மனையாள்; இடவாகு பெயர்; உடைதல் - பின்வாங்கல், கெடுதல். நீப்பு: தொழிற்பெயர்; நீ: பகுதி. உட்கு - நாணமுமாம்.

(க - து) அவைக்கு அஞ்சுங் கல்வி தீதுடையது. (அ)

---

* திருக்குறள், கல்வி. ௧0.

### கற்றன ஓம்புதல்

வருந்தித்தாங் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்கு
எய்த்துப் பொருள்செய் திடல்.

(பொ - ள்.) தாம் வருந்திக் கற்றன ஓம்பாது-மக்களாவார் தாங்கள் வருத்தப்பட்டுக் கற்ற நூற்பொருள்களை மறந்து போகாதவாறு அடிக்கடி நினைத்துப் பாதுகாக்கமாட்டாமல், மற்றும் சில பரிந்து கற்பான் தொடங்கல் இன்னும் சில நூல்களை வருந்திக் கற்கத் தொடங்குதல், கைத்தலத்த கரு தனம் உய்த்து சொரிந்திட்டு - ஒருவன் தன் கையில் இருப்பதான மிகுந்த பணத்தை வீசி எறிந்துவிட்டு, ஆங்கு அரிப்பு அரித்து எய்த்துப் பொருள் செய்திடல் - எறிந்த அவ்விடத்தில் அரிப்பரித்து இளைத்துப் பொருள் சேர்ப்பது போலாகும்.

(வி - ம்.) உவம உருபு சேர்த்துக்கொள்க 'வருந்தித் தாங் கற்றன' என்றமையால், கற்றலின் அருமை பெறப்பட்டது தொடங்குங்கால் துன்பமாய் என்று முன்னுங் (௩) கூறினர். ஓம்புதல்-பாதுகாத்தல்: 'குடியோம்பி' என்பர் பின்னும் (௨௬). மற்றும்-பிறிதுணர்த்தி நின்றது. கற்பான்: பானீற்று வினையெச்சம், கற்பதற்கு என்க. கருந் தனம் - பெரிய சொத்து, கருமைக்கு இப்பொருளுண்மை "கருங்கறி மூடையோடு"* என்பதிற் காண்க. உய்த்து-செலுத்தி, இங்கு வீசுதல். அரிப்பரித்தல்-வெயிலில் நின்று மண்ணை அரித்தெடுத்தல் இவ்வரித்த மண் வீடு கட்டுதற்கும் பாண்டம்வனைதற்கும் பயன்படும். இனி மண்ணோடு கலந்து கிடக்கும் பொருள்கள் அரித்தெடுக்கப்படுதல் பற்றி அரிப்பெனப்பட்டது எனினுமாம். பொருள் செய்திடல் - பொருள் சேகரித்தல். தொடங்கல், செய்திடல் போலாம் என்று முடிக்க.

(க - து.) கற்றவைகளை மறந்து மேலும் கற்பது பேதைமை (௯)

### வறிஞர் கல்வி

எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்.

---

* சிலப் - ஊர் காண். ௨௧௦.

(பொ - ள்.) மனைத்தக்காள்-மனைவி, மாண்பு இலளாயின்-மனைக்குத்தக்க மாட்சிமை இல்லாதவளானல், மணமகன் பூண்ட நல் அறம்-கணவன் மேற்கொண்ட இல்லறம், புலப்படாபோல்-விளங்காதது போல, இலம்பாட்டார் கல்வி - வறுமைத் துன்ப முடையவர்கள் கல்வி, எனைத் துணையவேனும் தினைத்துணையும் சீர்பாடு இலவாம்-எவ்வளவு திட்ப நுட்பங்கள் உடைய வானுலும் தினையளவும் சிறப்புண்டாதல் இல்லையாம்.

(வி - ம்.) எனைத்துணைய என்பதைத் திட்பங்களுக்குக் கொள்க. இலம்பாடு வறுமை என்னும் பொருள் தருதலை "இலம் பாடு அகற்றென்று "* என்னுந் திருவிளையாடற் புராணத்தா லறிக. சீர்ப்பாடு - சிறத்தல்; "மனைத்தக்க மாண்புடையள்"† என்பது இங்கு 'மனைத்தக்காள் மாண்பு' எனப்பட்டது.

"நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ
டன்பும் அருளுந் தாங்கி இன்சொல்லின்
விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி"

என்று இவ் வாசிரியர் இயற்றிய சிதம்பர மும்மணிக்கோவை யடிகள் "மனைத்தக்காள் .........நல்லறம்" என்பதன் கருத்தை விளக்கும். "இல்லற மல்லது நல்லறமன்று"‡ என்று ஔவைச் செல்வி கூறினமையால், இங்கு நல்லறம் எனப்பட்டது இல்லற மாயிற்று.

(க - து.) கல்வி சிறப்பதற்குச் செல்வப்பொருளும் வேண்டும் (கo)

செல்வரைச் சேர்தல்

**இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினுமோன்றில்லானேல்**
**வன்சொல்லி னல்லது வாய்திறவா—என்சொலினும்**
**கைத்துடையான் காற்கீழ் ஒதுங்குங் கடன்ஞாலம்**
**பித்துடைய வல்ல பிற.**

(பொ - ள்.) இன்சொல்லன் - இனிய சொற்களை யுடைய வனும், தாழ் நடையன் - அடங்கிய ஒழுக்கமுடையவனும், ஆயி னும் - ஆனாலும், ஒன்று இல்லானேல் - அவன் சிறிதும் பொருள் இல்லாத வறியவனானல், கடல் ஞாலம் - கடலாற் சூழப்பட்ட

---

* உலவாக்கிழி யருளிய படலம். கங.

† திருக்குறள், வாழ்க்கைத் துணை நலம். க.

‡ கொன்றைவேந்தன். ங.

உலகம், வன்சொல்லின் அல்லது - கடுஞ்சொற்கொண்டு பேசுதலல்லாது, வாய் திறவா - இன்சொற்கொண்டு பேசாவாம், என் சொல்லினும் - யாதுதான் சொன்னாலும், கைத்து உடையான் கால்கீழ் ஒதுங்கும்-செல்வமுடையவன் காலின் கீழே அடங்கும்; (ஆதலால் இவ்வுலக நிலைகள்) பித்து உடைய-பேதுறவே உடையன, அல்ல பிற - நல்லறிவு உடையன அல்ல.

(வி-ம்.) பிறர் மகிழும்படி தீங்கு பயவாத வகையிற் பேசும் பேச்சு இன்சொல். தாழ்நடை - அடங்கிய ஒழுக்கம். ஒன்று - சிறிது என்னும் பொருளில் வந்தது. இழிவுசிறப்பும்மை விரித்துக் கொள்க. வன்சொல்லினல்லது வாய்திறவா என்றது, உலகம் வன்சொல் சொல்லுதற்கு வாய்திறக்குமேயன்றி வேறு இன் சொல் சொல்வதற்கு வாய்திறவா என்றற்கு. கைத்து - கையிலிருப்பது; தன்மைத்து என்பதுபோல; அது பொருளை உணர்த்திற்று. என் - இங்குத் தாழ்ந்ததைக் குறித்தது. ஞாலம், அதன்கண் உள்ள மக்களுயிர்களை உணர்த்தி ஆகுபெயராய் நின்றது. ஞாலம் என்னுஞ் சொல்லின் அஃறிணை பற்றித் திறவா, ஒதுங்கும், உடைய, அல்ல, பிற என்பனவெல்லாம் பலவின் பாலாகவே வந்தன. பித்து—நல்லதன் நன்மையும் தீயதன் தீமையும் பிரித்துணராமை.

(க - து.) செல்வர், நற்குண நற்செய்கைகளில்லாதவராயினும் உலகம் அவர்க்கு அடங்கி நடக்கும். (கக)

### நோற்றார் பெருமை

இவறன்மை கண்டும் உடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்
முற்பகல் நோலாதார் நோற்றாரைப் பின்சேல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

(பொ - ள்.) இவறன்மை கண்டும் - ஈயாத் தன்மையைத் தெரிந்துகொண்டிருந்தும், உடையாரை - செல்வமுடையவர்களை, யாரும் - எல்லாரும், குறையிரந்தும் குற்றேவல் செய்ப - பொருள் வேண்டி அதன் பொருட்டுக் கைவேலைகளும் செய்வார்கள், முன்பகல் பெரிதும் தாம் நோலாதார் - முன்பிறப்பில் தாங்கள் மிகவும் தவம் செய்யாதவர்கள், நோற்றாரைப் பின் செல்லல் கற்பு அன்றே - தவம் செய்தவர்களைப் பின் சென்று வேண்டுதலன்றோ கல்வியறிவாகும்; கல்லாமை அன்று - அஃது அறியாமை யன்று.

(வி-ம்.) தவமுடையாரை வேண்டுதல் கல்விக்கு அழகு என்றமையாற் பொருளுடையாரை வேண்டுதல் அழகன்று என்பது பெறப்படும். இஃது இசையெச்சம். இவறன்மை-கேட்டபொழுது பொருள் கொடாமை, இஃது "இவறலும் மாண்பிறந்த மானமும்"* என்றவிடத்துப் பரிமேலழகர் இவறலும் என்பதற்கு "வேண்டியவழிப் பொருள் கொடாமையும்" என்று உரைகூறுதலின் வைத்து அறியப்படும். குறையிரத்தல்: இஃது ஒரு சொன் னீர்மைத்தாய், நின்று வேண்டுதல் என்னும் பொருள் தந்து நின்றது. குற்றேவல் - எடுபிடி வேலே. உம்மையைக் குற்றேவலுக்குக் கூட்டுக. பகல் - பிறப்புணர்த்திற்று. கல் என்னும் பகுதி விவ்விகுதி பெற்றுக் கல்வி யென்ருயதுபோல், புவ்விகுதி பெற்றுக் கற்பு என்ருயிற்று. கல்வி, கற்பு என்பன ஒரு பொருட் கிளவிகள். கற்பன்றே - என்பதனோடமையாமற் கல்லாமையன்று என்று பின்னுங் கூறியது தெளிவின் பொருட்டு. கற்பன்றே என்றது, ஈதன்ருே கற்பு என்றபடி. 'முற்பகலில் தவம் மிகுதியுஞ் செய்து செல்வராயுள்ளாரை, அவ்வாறு தவம் செய்து செல்வம் பெருத இலம்பாட்டார் பின் செல்வதன்ருே கல்வியறிவின் பயன் - அஃது அறியாமையன்று' என்று உரைகூறுவாருமுளர்; பொருளுடையாருள் இவறன்மை இல்லாதாரே தவமுடையராகலின், அது பொருளன்றென்பது கண்டுகொள்க. நோற்ருரைப் பின் செல்லல் கற்பன்றே கல்லாமையன்று என்றமையின், இவறன்மை கண்டு முடையாரை யாருங் குறையிரந்துங் குற்றேவல் செய்தல் கல்லாமையன்றே கற்பன்று என்பதும் பெறப்படுமா றறிந்துகொள்க.

(க - து.) பொருளுடையாரினும் தவமுடையார் உலகத்தவராற் பின்பற்றத் தக்கவராவர். (கஉ)

### கல்வியழகே யழகு

கற்ருேர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்ருே ரணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

(பொ-ள்.) முற்ற-ஒரு காலத்திலும், முழு மணிப்பூணுக்குப் பூண் வேண்டா - முழுமுழு மணிகளாற் செய்யப்பட்ட நகைக்கு வேறு நகை வேண்டா, யாரே அழகுக்கு அழகு செய்வார் - எவர் தாம் அழகுக்கு அழகு செய்வார்கள், (அதுபோல), கற்ருேர்க்குக்

---

* திருக்குறள், குற்றங்கடிதல், உ.

கல்வி நலனே கலன் அல்லால் - படித்தவர்களுக்கு அப் படிப்பி னழகே அழகாவதல்லாமல், மற்றோர் அணிகலம் வேண்டா ஆம்- அவருக்கு வேறொரு நகையழகு வேண்டுதல் இல்லையாம்.

(வி - ம்.) முற்ற - என்றது, எக்காலத்திலும் என்பதுணர்த் திற்று. உடைத்துச் சாணை தீட்டப்பட்ட பொடிமணிகளாலல்லா மல் முழு மணிகளாலேயே செய்யப்பட்ட நகையாம் என்றற்கு முழுமணிப் பூண் என்றார். பூண்: முதனிலைத் தொழிலாகு பெயர். கல்வி நலன் என்பது நல்ல கல்வியைக் குறித்தது; கல்வியழகு என்பது பொருள். நலன், கலன்: நலம், கலம் என்பவற்றின் போலி. முழுமணி - மாணிக்கம்; அஃது அறிவு நூற் கல்வி, மற்று - பிறிது. *"ஒருமொழி யொழிதன் இனங் கொளற் குரித்தே" என்பதனால் நகை என்னும் உவமையோடு, உடை முதலான அழகுகளையுங் கொள்க. இவையெல்லாம் தரும் அழகுகளை விடக் கல்வியாலாம் அழகு பெரிதென்பது,

"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு"

என்னும் நாலடியாராலுங் காண்க. ஆம்: அசை.

(க - து.) செல்வ வாழ்க்கையினுங் கல்வி வாழ்க்கையே சிறந்தது. (கரு)

கல்விச் செருக்கால் பயனில்லை

முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉங்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கோல்லுலைக் கூடத்தி னால்.

(பொ - ள்.) கனம் குழாய்-பளுவான காதணியை உடைய பெண்ணே!, முற்றும் உணர்ந்தவர் இல்லை-எல்லாம் தெரிந்தவர் உலகத்தில் ஒருவரும் இல்லை; முழுவதூஉம் கற்றனம் என்று களியற்க - ஆதலால் எல்லாவற்றையும் கற்றுவிட்டேம் என்று செருக்காதே, ஏனென்றால், சிறு உளியால் - மிகச் சிறிய உளி யினால், கல்லும் தகரும் - மலைகளும் உடையும்; கொல் உலைக் கூடத்தினால் தகரா - ஆனால் கொல்லனுடைய உலைக்களத்தில் உள்ள சம்மட்டியினால் அம் மலைகளும் உடையா.

* நன்னூல், பொதுவியல், எ.

(வி - ம்.) உணர்ந்தவர் இல்லை என்று உயர்திணைப் பெயருக்கு இல்லையென்னும் பயனிலை கொடுத்து முடித்தலை, "வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன"* என்பதனுற் கொள்க. கற்றனம் : தன்மை ஒருமை உட்கொண்டது ; சிறப்பின் பொருட்டுப் பன்மையில் வந்தது, கல்-மலை; இஃதிப் பொருட்டாதல் "கல் இயங்கு கருங்குற மங்கையர்"† என்னுங் கம்பர் மொழியிற் காண்க. தகரா : எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று. கொல்-கொல்லன் ; விகுதிகெட்டுப் பகுதியளவாய் நின்றது. இங்ஙனம் வருதலைக் "கொல்உலை வேற்கண் நல்லார்"‡ என்னும் நைடதப் பாட்டானும் அறிக. உலை, உலைக்களத்துக்கு வருதலும் அதன் கண் உள்ளது. கூடம் என்பது சம்மட்டியை உணர்த்துதலும் "கூடம் எடுத்து அங்கைத் தலத்தால் அறைதிர்"§ என்பதன் கண் அறியப்படும். முதலிரண்டடிகளுக்குப் பின்னிரண்டடியின் உவமையால் எதுக் கூறினர். உவமம், சிறிது கற்றுரும் பெரிது கற்றுரை வென்றுவிடுவர் என்னும் வேறொரு பொருளையும் உட்கொண்டு நின்றது.

(க - து.) கற்றனம் என்று செருக்கடையலாகாது. (கச)

## அகமகிழ்வும் செருக்கழிவும்

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினுங்
கற்றுரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று.

(பொ - ள்.) தம்மின் மெலியாரை நோக்கி - தம்மைவிடக் கல்வியிற் குறைந்திருப்பாரைப் பார்த்து, தமது உடைமை அம்மா பெரிது என்று அகம் மகிழ்க-தாம் கற்ற கல்விப்பொருள், அம்மா! மிகுதியாகும் என்று உள்ளம் மகிழ்ந்துகொள்க ;(ஆனல்) தம்மினும் கற்றுரை நோக்கி-தம்மைவிட மிகுதியாகப் படித்திருப்பவர்களைப் பார்த்து, நாம் கற்றதெல்லாம் எற்றே இவர்க்கு என்று கருத்து அழிக - நாம் படித்த படிப்பெல்லாம் இவர் படிப்புக்கு எந்த அளவின் தன்மையது என்று வருந்திச் செருக்குக் கருத்தை விட்டுவிடுக.

---

* நன்னூல், வினையியல், உ0.

† இராம. வரைக். சுக. ‡ நைடதம், நாட்டுப். உஎ.

§ நைடதம், சந்திரோபாலம்பனப் படலம் : சஉ.

(வி - ம்.) செல்வத்துக்குப் பெயராக வரும் உடைமை என்பதைக் கூறினர், செல்வ நிலையிலும் இங்ஙனமே தம்மின் மெலியாரைக் கண்டு அகம் மகிழ்தற்கும், பெரியாரைக் கண்டு கருத்தழிதற்கும் என்க. 'அகம் மகிழ்க' என்றார், தம் மகிழ்ச்சியைப் புறத்திற் காட்டலாகா தென்றதற்கு, 'அழிக' என்றார், கல்விச் செருக்கின்பால் சான்றோர்களுக்கு உள்ள வெறுப்பைத் தேற்றுதற்கு. உடைமை - செல்வம், "இவறன்மை கண்டும் உடையாரை" (கஉ) என்று முன்னும் வந்தது. இச்செய்யுள், உள்ளக் கருத்தை நோக்கியதாதலால், உடைமை என்பதைப் பண்புப் பெயராகக் கொண்டு உடையராந் தன்மை என்று பொருள் செய்தலும் ஒன்று. இஃது *"எம்மையுடையார் எமையிகழார்" என்னும் சிவஞான போதத் திருமொழியிலும் †"உடைமையுள் இன்மை என்னுந் திருவள்ளுவர் திருமொழியிலும் விளங்கும். திருவள்ளுவர் திருமொழியில் உள்ள உடைமை என்பதற்கும் உரையாசிரியர் பரிமேலழகர் "உடையனுந் தன்மை" என்று பொருளுரைத்தார். அம்மா: வியப்புணர்த்தும் இடைச்சொல், எல்லாம் முழுமைத் தன்மையை ஏற்று அளவினையுங் குறித்தது.

(க - து.) செருக்கும் வருத்தமும் இல்லாமல் மேன்மேலும் கற்றலிலேயே கருத்தூன்றி நிற்றல் வேணடும். (கரு)

தாழ்ந்தாரிடந் தாழ்தல்

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின்.

(பொ-ள்.) இல்லார்-கல்வியும் செல்வமும் இல்லாதவர்கள், குறை யிரந்து தம் முன்னர் நிற்ப போல் - அவ்விரண்டையும் வேண்டி அவ்விரண்டுடைய தமக்கு முன்னால் நிற்பதுபோல, தாமும் தலைவணங்கித் தாழப்பெறின் - தாங்களும் தலையால் வணங்கித் தாழ்ந்து நிற்கப்பெற்றால்; கல்வியுடைமை பொருளுடைமை என்று இரண்டு செல்வமும் செல்வம் எனப்படும் - தாங்கள் பெற்ற கல்விச் செல்வம் பொருட்செல்வம் என்னும் இரண்டு செல்வங்களும் உண்மைச் செல்வங்களென்று உயர்ந்தோரால் பாராட்டப்படும்.

---

* சிவஞானபோதம், அவையடக்கம்.

† திருக்கு - விருந்தோம்பல் : க.

(வி - ம்.) உடைமை என்பதைத் தொழிலாகு பெயராகக் கொண்டு செல்வம் என்று உரைக்க. அவ்வாற்றால், கல்வி யுடைமை என்பது கல்வியாகிய உடைமை எனப் பொருளாம். இது பண்புத்தொகை நிலைத் தொடர். இவ்வாறுரைக்க அறியா தார் உடைமை இரண்டுங் குறிப்புத் தொழிற்பெய ரெனக் கொண்டு பொருள் மயக்கஞ் செய்வர். செல்வத்தாற் கல்வியும் கல்வியாற் செல்வமும் ஒன்றுக்கொன்று துணையாய் நின்று ஓங்கிப் பொலியுமாதலின், அவ்விரண்டும் ஒருவற்கு வேண்டற்பாலன வாம் என்பது கருத்து. இதற்குமுன் வந்த கO, கக ஆம் செய்யுட்க ளாலும் இது விளங்கும். பொருளுடைமையால் விளையுஞ் செருக் கெழுச்சியைக் கல்வி யுடைமை தாழச்செய்யுமாதலின், 'தாழப் பெறின்' என்றார். பொருட் செல்வத்தை உண்மைப்பொருட் செல்வமாக்குவது கல்வி யுடைமையாதலால் அதனை முற்கூறி னார். அன்றியும், இல்லையென்று வருவாரை இன்சொன் மொழிந்து தாழ்ந்து எதிரழைப்பது முன்னும், பொருள் தருவது பின்னுமாய் நிகழ்தலால், அம்முறையே தாழ்மை பயக்குங் கல்வி யுடைமை, ஈகை பயக்குஞ் செல்வமுடைமைக்கு முன்னின்றது என்றலுமாம். இங்ஙனம் தாழ்மையும் ஈகையுமான பயன்களைப் பெற்றபொழுதே கல்வியுடைமையும் செல்வமுடைமையும் உண் மைச் செல்வங்களெனப்படும் என்றற்குச் செல்வமுஞ் 'செல்வ மெனப்படும் 'எனப்பட்டது. "அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம், பூரியார் கண்ணும் உள..." என்னுந் திருவள்ளுவர் கருத்தும் இது. தாழ்தலையுடையவர் கொடையுடையரா யிருப்பவராதலால், தாழப்பெறின் என்பத னோடு நின்றது. தலைவணங்கித் தாழப்பெறின் என்றார். கல்வி யுடைமை செல்வமுடைமை என்னும் இரண்டாலும் விளைவதாம் செருக்கை அவ்வப்போது அடக்கிக்கொண்டே வரல் வேண்டு மென்பதற்கு. "பெறின்" என்றார், தாழ்தலின் அருமையும் பெருமையுந் தோன்ற. "மேலோ ராயினுந் தாழவுரை"† என்னும் முதுமொழி இருக்கக் கருதுதற்குரியது. இனிக், கல்வியுஞ் செல்வமும் தனித்தனி உடையார்க்கும் இச்செய்யுட் கருத்துப் பொருந்தும். நிற்ப : நிற்பது என்பதன் ஈறு தொகுத்தல்,

(க - ரு.) கல்வியும் செல்வமும் உடையார்க்கு அழகாவது அவை யில்லாதாரிடத்துந் தாழ்மையோ டிருத்தலாகும். (கசு)

தாழாதாரிடத்துந் தாழ்தல்

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப—தூக்கின்

* திருக்கு - அருளுடைமை, க. † கொன்றைவேந்தன். கஎ.

மேலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலேக்கு.

(பொ - ள்.) தூக்கின் - உயர்த்திப் பிடித்தால், துலேக்கு - தராசில், மெலியது மேன்மேல் எழச் செல்லச் செல்ல - இலேசான பொருளுள்ள தட்டு மேல்மேலே எழுவதற்கு உயரும் பொழுதெல்லாம். வலிது அன்றே தாழும் - பளுவான பொருளுள்ள தட்டன்றே தாழ்ந்துபோகும்; (அதுபோல), ஆக்கம் பெரியார் - கல்வியிலும் செல்வத்திலும் அல்லது இவ்விரண்டிலும் மிகுந்து பெரியாராயிருப்பவர்கள், சிறியாரிடைப்பட்ட மீச்செலவுகாணின் நனிதாழ்ப - அவ்விரண்டிலுங் குறைந்துசிறியராயிருப்பவர்களிடத்தில் உண்டான வரம்பு கடந்த நடக்கையைக் கண்டால் அவர்களுக்கு மிகவும் தாழ்ந்து நடப்பார்கள்.

(வி - ம்.) ஆக்கம் - ஆக்குதல்; அது தன்னேச் சேர்த்துக் கொண்ட ஒருவனே மேன்மேலும் உயர்வாக்கும் என்னும் பொருளில் ஆகுபெயராய்க் கருவியையும் செல்வத்தையும் உணர்த்திற்று. ஆக்கத்திற், பெரியார் சிறியார் என்று கொள்க. இடை, இடம் என்பன ஒருபொருட் பன்மொழி. பட்ட - உண்டான. மீச்செலவு - அளவுக்கு மீறிநடக்கும் நடக்கை. செலவு - நடக்கை: இது தொழிற்பெயர்; இஃதிப் பொருட்டாதல் "சேவடி படரும் செம்மல் உள்ளமொடு, நலம்புரி கொள்கைப் புலம் பிரிந்து உறையும் செலவு" என்றவிடத்துக் காண்க. மீச்செலவு: ஒரு சொன்னீர்மைத்து. எழ, செல்ல என்னும் இரண்டிற்கும் வினேமுதல் இலேசான பொருளுள்ள தட்டு, மெலியது வலிது என்பன இடத்துக்கேற்றபடி துலேத் தட்டுகளே உணர்த்தின. துலேக்கு: உருபு மயக்கம். முன் செய்யுள் தாழ்ந்தாரிடந் தாழ்தலேக் குறித்தது. இச்செய்யுள் தாழாதாரிடத்துந் தாழ்தலேக் குறித்தது.

(க. - து.) தமக்குத் தாழ்ந்து நடவாதாரிடத்தும் தாம் தாழ்ந்து நடத்தலே தக்கது. (கஎ)

நலத்தகையார் தற்புகழ்ச்சி

விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினேயுந் தீதே—புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கில் நின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

---

* திருமுருகாற்றுப்படை. சுஉ.

(பொ-ள்.) புலப் பகையை-ஐந்து புலன்களாகிய பகையையும், வென்றனம் - வென்றுவிட்டோம்; நல் ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்றேம் என்று - தவருமல் நின்ருேமென்று, தம்பாடு - தம்பெருமையை, தம்மில் கொளின்-தமக்குள் கருதிக் கொள்வாராயின், விலக்கிய : செய்யத் தகாதவென்று விலக்கப்பட்ட செயல்களை, ஓம்பி - செய்யாமற் காத்து, விதித்தனவே - செய்யத் தக்கவை யென்று வரையறுக்கப்பட்டவற்றையே, செய்யும் - செய்தற்குரிய, நலத்தகையார் - நன்மையாகிய தன்மையுடையாரது, நல்வினையும் - நல்ல செயலும், தீதே - பயனற்றதேயாகும்.

(வி - ம்.) ஓம்பி - பேணி. விலக்கிய, விதித்தன : பலவின்பால் வினையாலணையும்பெயர்கள். ஐம்புலன்கள், சுவையொளியூருேசை நாற்றம் என்பன. இவை மனத்தை முத்தி வழியிற் போகவிடாது தடுத்தலின், புலப்பகை என்ருர். ஏ இரண்டில் முன்னது பிரிநிலை, பின்னது தேற்றம். ஒழுக்கு: முதனிலை திரிந்த தொழிற்பெயர், பிற: அசை, நல்வினையும்: உம்மை உயர்வு சிறப்பு. வென்றனம், நின்ருேம்: தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்; அம் ஏம் என்பன விகுதி.

(க - து.) ஐம்புலன்களையும் வென்ற நல்லொழுக்கமுடையாரும் தற்புகழ்ச்சி கொள்ளல் தீது. (கஅ)

## தற்புகழ்ச்சியின் இழிவு

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்ருல்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம்.

(பொ - ள்.) தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் - தன்னைப் பிறர் மதிக்கும்படி செய்வதற்காகத் தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுதல், தீச்சுடர் நல்நீர் சொரிந்து வளர்த்தற்று - குளிர்ந்த நீரை விட்டுத் தீவிளக்கை வளர்த்தது போலாம்; ஆதலால், தன்னை வியவாமை அன்றே வியப்பாவது - தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளாமை யன்ருே நன்மதிப்பாகும்; இன்பம் நயவாமை அன்றே நலம் - இன்பத்தை விரும்பாமையன்ருே இன்பமாகும்?

(வி - ம்.) தீவளரும் என்று நீர்விட்டால் முன்னிருந்த தீயும் எப்படி வளராது அவிந்தே போகுமோ அதுபோலவே, தனக்கு

மதிப்பு மிகுமென்று தன்னைத்தானே புகழ்ந்துகொண்டால் இதற்கு முன்னிருந்த மதிப்பு மிகாது அழிந்தே போகும் என்பது. வியப்பிப்பான்: பானீற்று வினையெச்சம். மணிச்சுடர் முதலாயின இருத்தலின், இதனைத் தீச்சுடர் என்றார். தீச்சுடர் என்ற குறிப்பால் நல்நீர் என்பது தண்ணீராயிற்று. சொரிந்து என்னுங் குறிப்பினால் எரியும்போது நெய் சொரிந்து தீ வளர்த்தல்போல, வளருமென்று, எரியும்போது தண்ணீர் சொரிந்து அதன் வளர்ச்சியை எதிர்நோக்கினானென்பது பெறப்படும். இங்ஙனம் கூறவறியாது, எண்ணெய் விடுதற்கு ஈடாக அகலில் தண்ணீர் நிரப்பித் தீ வளர்த்தான், என்று சிறவாப் பொருளுரைப்பாருமுளர். இன்பம் நயவாமையன்றே நலம் என்பதை வியவாமையன்றே வியப்பு என்பதற்கு உவமையாகக் கொள்ளலுமாம். நலம் - ஈண்டு இன்பம், நயவாமையே இன்பமாவதென்பது. "இன்பம் இடையறு(து) ஈண்டும் அவா என்னும், துன்பத்துள் துன்பம் கெடின்"* என்னும் வாய்மொழியினால் இனிது விளங்கும். ஆவது என்பதை நலத்திற்குங் கொள்க.

(க - து) தற்புகழ்ச்சி இகழ்ச்சியைத் தரும். (கக)

## பிறர் நன்மதிப்புறல்

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்.

(பொ - ள்.) பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான்-மற்றவர்களால் நன்கு மதிக்கப்படுவதற்கான பெருமதிப்பை விரும்புமொருவன், யாண்டும் மறவாமே நோற்பது ஒன்றுஉண்டு-எப்பொழுதும் மறவாமற் செய்யத்தக்கது ஒன்றிருக்கின்றது; (அது), பிறர் பிறர் சீர் எல்லாம் தூற்றிச்சிறுமை புறம் காத்து - மற்றவருடைய பெருமைகளையெல்லாம் மறைக்காமல் வெளியே பரப்பி அவர்கள் தீய வொழுக்கத்தை மட்டும் அங்ஙனம் வெளியே பரப்பாமற் காத்து, யார் யார்க்கும் தாழ்ச்சி சொலல் - எல்லாரிடத்திலும் வணக்கமான மொழிகளையே பேசுதலாம்.

(வி-ம்.) பிறராற் சுட்டப்படும் சுட்டென்று கொள்க. சுட்டு இங்கு ஒருவன் நலன்களைச் சுட்டி எண்ணுதலாலான மதிப்புக்கு வந்தது. வேண்டுவான் - விரும்புவான். "வேண்டுவார் வேண்டு

---

* திருக்குறள். அவாவறுத்தல், க

வதே ஈவான் கண்டாய்"* என்பதிற் காண்க. நோற்பது-நோன்புபோல எண்ணிச் செய்க என்பது. பிறரைப்பற்றிய நல்ல செய்திகளையெல்லாம் மறைக்காமல் வெளியே பரவச்செய்து கெட்ட செய்திகளை அங்ஙனம் பரப்பாமற் காத்துக்கொள்ளும் உயர்ந்த செயல் கடவுளுக்கு நோன்பெடுக்கும் வணக்கச் செயலோடு ஓராற்றல் ஒத்ததாம் என்பது அதன்குறிப்பு. பிறர் பிறர்: யார் யார் என்னும் அடுக்குகள் பன்மைப் பொருளன. தூற்றுதல் என்பது, பெரும்பாலும் கெட்ட செய்திகளை வெளியிற் பரப்புவதற்கே வருதல் வழக்கு; ஆனல் அச் சொல்லை இங்கு நல்ல செய்தியை வெளிப்படுத்துதற்குக் கூறினர், அக்கெட்ட செய்திகளைப் பரப்புவதுபோல் அவ்வளவு விரைவோடும் அவாவோடும் எங்கும் இந் நல்ல செய்திகளைப் பரப்புதல் வேண்டுமென்றற்கு. புறங்காத்து-புறத்தே போகவொட்டாதபடி காத்து; தாழ்ச்சி-தாழ்மையான மொழியின்மேல் நின்றது.

மேற்செய்யுளாலும் இச்செய்யுளாலும் பெறப்படுவது, தன்னைப் பிறர்மதிக்க வேண்டுமென்று எண்ணுபவன், தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளாமல் தன்னைத் தாழ்மையாகவே உரைத்துக் கொண்டு, பிறரைமட்டும் அவர்பாற் காணப்படும் உயர்ந்தசெயல்களால் உலகவர் புகழவைத்து, அவர் தாழ்ந்த செயல்களை வெளிப்படுத்தாமல் மறைக்கக் கடவன் என்பது.

(க - து.) பிறரைப்பற்றிக் கோளுரைக்காமல் அவர் செய்த நன்மையையே உரைத்தால் நன்மதிப்பு வரும். (உ0)

## கற்றபடி ஒழுகல்

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

(பொ - ள்.) கற்றுப் பிறர்க்கு உரைத்துத் தாம் நில்லார் வாய்ப் படூஉம் வெறு உரைக்கு ஓர் வலி உடைமை உண்டு-நூல்களைப் படித்துப் படித்தபடி ஒழுகவேண்டுமென்ற அக் கருத்துக்களைப் பிறர்க்குமட்டும் எடுத்துக் கூறிக் கூறியபடி தாங்கள் அவ்வொழுக்கத்தில் நில்லாமலிருக்கின்றவர்கள் வாயில் உண்டாகும் பயனில்லாத சொல்லுக்கு ஒரு வலியுடைமை இருப்பதுண்டு; (அது), சொற்ற நீர் நில்லாதது என் என்று

* தேவாரம், திருநாவுக்கரசு நாயனர், சு. உகூஎ-க.

நாண் உறைப்ப நேர்ந்து ஒருவன் சொல்லாமே சூழ்ந்து சொலல்- நாங்கள் கற்றதன்படி ஒழுகவேண்டுமென்று சொல்லிய நீங்கள் அங்ஙனமே அவ்வொழுக்கத்தில் நில்லாதது ஏனோ என்று வெட்கம் உறைக்கும்படி எதிர்த்தொருவன் இகழ்ந்து சொல்லாத படி, அறிவுறுத்தும்போது பிறர்க்கு நினைத்துப் பார்த்து அறிவுறுத்தலாம்.

(வி-ம்.) சூழ்ந்து சொல்லல் ஒரு வலியுடைமை யென்க. சூழ்ந்து சொல்லலாவது நீங்கள் அவ்வாறு நடத்தல் வேண்டுமென்று எதிரிருப்பாரைமட்டுஞ் சுட்டிச் சொல்லாமல் தன்னையும் அவர்களோடு சேர்த்துக்கொண்டு நாமெல்லாம் அவ்வாறு நடத்தல் வேண்டுமென்று தன்மைப்பன்மையாற் கூறுதல் போல்வன. இங்ஙனம் கூறுதலு முண்டென்று அப் படிற்றொழுக்கத்தை இழித்தபடியாம். உறைத்தல் என்பது வருந்தும்படி நன்றாகத் தாக்குதல். "உறைப்பின் வீழ் ஒதுங்கு இடம் இன்மையின்"* என்பது கந்தபுராணம். 'நான் சொல்வது உன் உடம்பில் உறைக்க வில்லையா' என்பது வழக்கு.

(க-து.) 'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்பது. (உக)

நரகஞ்செல் புலவர்

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கோளல்.

(பொ-ள்.) பிறர்க்குப் பயன்படத் தாம் கற்ற விற்பார் - உரியரல்லாத பிறருக்குப் பயனாகும்படி தாம்வருந்திக் கற்ற கல்வியறிவுகளைப் பணத்துக்காகக் கொடுக்கும் புலவர்கள், தமக்குப் பயன் வேறு உடையார்-தங்களுக்கு வேறொரு பயனை உடையராவார்கள்; (அது), திறப்படூஉம் தீவினை அஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார் கோவினை - பலவகைப்பட்ட தீய செயல்களையும் செய்தற்கு அஞ்சாத ஆற்றல் படைத்த தென்புலத்தார்க்குத் தலைவனான கூற்றுவனை, வேலை கொளல்-தங்களை நரகத்திலிட்டு ஒறுக்கும்படி வேலை வாங்குதலாம், (அஃதாவது, அப் புலவர்) நரகத்துக்குச் சென்று வருந்துவர் என்பது.)

(வி-ம்.) நல்லறிவு, நல்லொழுக்கம் முதலியவற்றிற்குப் புறம்பானவர்களைக் குறித்திடுவார் பிறர்க்கென்றார். கற்ற: வினையாலணையும்பெயர். விற்பார் என்றார், அங்ஙனம் செய்த

* கந். பு. நகரழி படலம், கூ0.

வன் இழிவு நோக்கி. இது நல்ல தன்மையில் இல்லாத செல்வர்களை அவர்களிடம் பொருள் பெறுவதற்காகப் பாட்டுப்பாடும் புலவர்கள் போன்றோரைக் குறித்தது. தம்மைப் படைத்துப் புலவராக்கி எப்போதும் புறம்புறந்திரிந்து பாதுகாக்கும் எல்லாம் வல்ல கடவுளைத் தாம் வருந்திக் கற்றதன்பயனாக வாயாரப் பாடாமல், அருகே அணுகுதற்குந் தகுதியற்ற பொல்லாச் செல்வந்தரைப் பரிந்து பாடுதல் ஒரு தீவினை ; அதுவுமன்றி, அவரை அளவுக்குமேற் புகழ்ந்து பாடுதலோடு ஒப்பும் உயர்வும் அற்ற இறைவனோடு அவ்வொப்பும் உயர்வும் பொருந்த உரைத்துப் பணம் பறித்தல் மற்றுமொரு தீவினை ஆதலின் நமனால் ஒறுக்கப்படுவாரென்க. *"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்" என்பர் திருவள்ளுவர். அல்லது இதனைத் தகுதியில்லாத மானுக்கர்க்கு அவர் கொடுக்கும் பணமொன்றே கருதித் தாங் கற்ற அறிவுநூல்களை அறிவுறுத்துவார்க்குங் கொள்வதுண்டு. கொண்ட என்பது கொண்டு எனத் திரிந்தது. தென்புலத்தார் - இறந்த உயிர்கள். இவை தெற்கிடத்தில் இருக்கின்றன என்னும் வழக்குப்பற்றித் தென்புலத்தா ரென்றார். இதனை நாயனாரும் கூறுவார். †

(க - ரு.) பொருட்பற்றில்லாது தகுதியுள்ளாரை நாடிக் கல்வியைப் பரவச் செய்தல் வேண்டும். (உஉ)

கல்லாதார் அவையடங்காமை

கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்
கோற்கமின் றாத்தைவாய் அங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு அஞ்சன்மின் என்பவே மாபறவை
புல்லுரு அஞ்சுவ போல்.

(பொ - ள்.) கற்பன ஊழ் அற்றார் - கற்கப்படுவனவற்றிற்கான நல்வினை இல்லாதவர்கள், கல்விக் கழகத்து-கல்வி பயிலும் இடத்தில் (அஃதாவது புலவர்களின் அவையில்); ஒற்கம் இன்று-அடக்கம் இல்லாமல், ஊத்தை வாய் அங்காத்தல் - அழுக்குப் பிடித்த தம் வாயைத் திறந்து பேசுதல் முதலியன, மா பறவை புல் உரு அஞ்சுவபோல் - விலங்குகளும் பறவைகளும் புல்லினாற் செய்யப்பட்ட பொய் உருவத்துக்கு அஞ்சுவது போல, தம் வல் உரு அஞ்சன்மின் - தம்முடைய வலிமையான உருவத்துக்கு அஞ்சாதிருங்கள், என்பவே - என்று சொல்வனவேயாம்.

---

* திருக்குறள், கடவுள் வாழ்த்து, உ.

† திருக்குறள், இல்வாழ்க்கை, ரு.

(வி-ம்.) கற்பன-கற்கப்படுவன, அவை, நூற்கருத்துக்கள். இந் நூலாசிரியர் குமரகுருபர அடிகள் இந் நூல் முழுதும் கல்வியைப் பன்மையாகவே கூறுகின்றார். 'தாங் கற்ற விற்பார்' 'கற்றதெல்லாம்' 'எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி' 'வருந்தித் தாங் கற்றன' 'நெடும்பகற் கற்ற அவையத்து உதவாதுடைந்து' 'எத்துணையவாயினுங் கல்வி' என்று இச் செய்யுட்கு முன்னும்; 'கல்வி ..சேரா' 'கற்றன கல்லார் செவிமாட்டி' என்று பின்னும் வருதல் காண்க. கற்பன ஊழ்: நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. ஒற்கம் - அடக்கம். ஊத்தை வாய்அங்காத்தல், வல் உரு என்றார், கல்லாதார் பேசுதலின் இழிவு தோற்றுதற்கு. அங்காத்தல் என்பதன் குறிப்புக் கண்டு அதற்குக் கற்றாரொருவர் பேசும் பொழுது அவைக்கண் இடை இடையே வாய் திறந்து பேசுதல் என்றும் பொருள் கூறுப. மாவும் பறவையும் என்று உம்மைத்தொகை விரிக்க. புல்லுரு என்பது, கம்பு தினை முதலியன விளைந்து கதிர் முற்றிய கொல்லைகளில், விலங்குகளும் பறவைகளும் 'யாரோ ஒரு காவற்காரன் கையிற் கொம்பு வைத்திருக்கின்றான்' என்று நினைத்து அஞ்சும் படியாக, அக் கொல்லைக்காரர்கள் புல்லினாற் செய்துவைக்கும் உருவம். விலங்குகளும் பறவைகளும் அவ் வுருவத்தின் உண்மையை அறிந்துகொண்டால், எப்படி அவைகள் அஞ்சாது செல்லுமோ அதுபோலக் கல்லாதவர்கள் தங்கள் வாய் திறந்து பேசுவதனால்தங்கள் பாற் கல்வி நலமில்லை யென்பதைக் காட்டிக் கொள்ளுகின்றார்களாதலின், மற்றவர்களும் இவர்களுக்கு அஞ்சாமல் நடப்பார்கள் என்க. ஆகவே, கல்லாதவர்கள் பேசுவது, தம்மிடத்திற் கல்வியில்லை என்பதைக் காட்டி, எதிரிலிருப்பவர்களை அச்சப்படாதிருங்கள் என்று கூறுவதுபோ லிருக்கின்றது என்றார். என்ப என்று பன்மையாற் கூறினமையின். அங்காத்தல் முதலியன என்று பல வினைமுதல்கள் வருவிக்கப் பட்டன. முதலியன எனப்பட்டவை, கற்றதுபோற் காட்டிக் கொள்ளும் உடற்புணைவு முதலியவைகளை. அஞ்சுவது: கடைக் குறை. இது தொழிற்பெயர்.

(க - து.) தெரிந்தவர்கள் முன்பு, தாமும் தெரிந்தவர்கள் போலப் பேசலாகாது. (உகூ)

கல்விசேர் இயல்பினர்

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கோள் நகையினார் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கோளப்படுவ தில்.

(பொ - ள்.) தாக்கு அணங்கும்-தாக்கி வருத்துகின்ற, ஆண வாம் பெண்மை - ஆண்மக்கள் அவாவக்கூடிய பெண்மைத் தன்மை, உடைத்து எனினும் - உடையது என்ருலும், பெண் நலம் - அப் பெண்ணின் இன்பம், பேடு கொளப்படுவது இல்- பேடுகளாற் கொள்ளப்படுவதில்லை ; (அதுபோல), போக்குஅறு கல்வி - குற்றமற்ற கல்வி, புலம் மிக்கார்பால் அன்றி - அறிவு மிக்கவரிடத்தில் அல்லாமல், மீக்கொள் நகையினுர்வாய்-விளை யாட்டுத் தன்மையையே மிகுதியும் மேற்கொண்டிருப்பவர் களிடத்தில், சேரா - சேரமாட்டாவாம்.

(வி - ம்.) போக்கு - ஒழியத்தக்கது. அது குற்றம். புலம் - அறிவு. ஆராய்ந்து குற்றத்தை நீக்குவார் புலமிக்காராதலினுல் புலம் மிக்கார்க்குப் போக்காறு கல்வி கூறினுர். நகையினுர் என்ற னர் விளையாட்டுத் தன்மையுடையவரை. ஆன்ற அறிவும் அருளும் உடைய பெரியோரெல்லாரும் மிக ஆழ்ந்து ஆராய்ந்து காட்டிய கல்விப்பொருளை அவரைப்போலவே மிக அமைந்த நோக்கமும் ஆழ்ந்த கருத்தும் உடையராய் யாண்டும் நெஞ்சம் செல்லுத லின்றிப் பெருந்தன்மை பொருந்திக் கற்பாராதலினுல் அப் பெருந்தன்மை வாயாது விளையாட்டிற் பொழுதுகழிக்கும் வீணர் களிடம் அக் கல்விப் பொருள்கள் சேரா என்ருர். தாக்கும் அணங்கும் பெண்மை என்று சேர்த்து வினைத்தொகையாகக் கொண்டு தாக்கி வருத்துகின்ற பெண்மைத்தன்மை என்று உரை கூறுக. ஆண் அவாம் என்பதை அப் பெண்மைக்குக் கூட்டி வினைத்தொகையாக்குக. பெண்ணலம் ஆணவாம் தாக் கணங்கும் பெண்மையுடைத் தெனினும், அது-பேடு கொளப்படு வதில் என்று வினை முடிவு செய்க. பேடு - இங்கு ஆண் தன்மை இழந்தது. ஆண் தன்மையை யிழந்த ஆண்பால் பெண்பாலாகக் கொள்ளப்படும். "ஆண்மைவிட்டல்ல தவாவுவ பெண்பால்"* என்பது நன்னூல். ஆதலால், பெண்பாலெனக் கொள்ளப்படு வது பெண்ணின்பத்தை நுகர ஏலாதது காண்க. "பெண்மக்க ளின் இயற்கையழகு ஆண்மக்களின் அறிவு ஆற்றல் முதலியவை களைத் தாக்கி அவர் நெஞ்சத்தைத் தன் கீழ்ப்படுத்தி வருத்த லால், தாக்கி வருத்துவதோ ரணங்கு"† என்று பொருளுரைப்பர் ஆசிரியர் பரிமேலழகர். அணங்குதல் வருத்துதல், இஃதிப்பொருட் டாதல் "பெண் அணங்கு பூந்தார்"‡ என்ற விடத்துங் காண்க.

(க - து.) விளையாட்டுத் தன்மையுடையவர்கட்குப் படிப்பு வாராது. (உச)

---

* பெயரியல், எ.

† திருக்குறள், தகையணங்குறுத்தல், உ, உரை.

‡ சிந்தாமணி, முத்தி. கஎக.

## கற்றவர் கல்லாதவர் இயல்பறிதல்

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்.

(பொ - ள்.) தாம் கற்றன - (படித்தவர்கள்) தாம் படித்த நூற் பொருள்களை, கல்லார் செவிமாட்டி - படிக்காத மூடர்களுடைய காதில் நுழைப்பதனால், கையுறூஉம் - தமக்குப் பொருந்தும், குற்றம் - அவமானக் குற்றம், தமதே - தம்முடையதே, பிறிது அன்று - வேறொருவருடையது அன்று, முற்றும் உணர்ந்தும் - எல்லாந் தெரிந்திருந்தும், அவர் தன்மை உணராதார் - அம் மூடர்களுடைய மூடத்தன்மையை உணராதவர்கள். தம் உணரா ஏதிலரை - தம்மைக் கற்றவர்களென்று உணர்ந்து கொள்ளாத அம்மூடர்களை, நோவது எவன் - நொந்துகொள்வது ஏன்?

(வி - ம்.) 'தாம் அவர்' என்பதில் உள்ள தாம் என்பதை எடுத்துத் 'தாம் கற்றன' என்று இணைத்துக்கொள்க. செவிமாட்டி - செவிமாட்டுதலால்; மாட்டி என்பதன் சொல்லாற்றல் தம்முடைய அறிவுநூற்பொருளை அம்மூடர்கள் விரும்பாராகவும், அவர்கள் விரும்பவில்லை என்பதைத் தாமுந் தெரிந்திருந்தும், வேண்டுமென்றே வலிந்து அறிவுறுத்தலை விளக்கிற்று. அங்ஙனம் அறிவுறுத்தலினால் 'அவமானமே அகப்படும்' என்பார், 'கையுறூஉங் குற்றம்' என்றார். கையுறல்-அகப்படல்; "காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும்" என்பது நாலடியார்.* அளபெடை இன்னிசை நிறைக்க வந்தது. தமது: குறிப்புமுற்று. ஏகாரம்: தேற்றம். பிறிதன்று - வேறன்று; அக்குற்றம் அம் மூடர்களுடையது அன்று என்னும் பொருளில் வந்தது. நன்றாய்ப் படித்து எல்லாம் தெரிந்திருந்துங்கூடத், 'தம் அறிவுரைகளை அம்மூடர்கள் ஏற்றுக்கொள்வார்கள் அல்லது ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்' என்று அறிந்து கொள்ளாமற் போனால். அம்மூடர்கள் எவ்வாறு, 'இவர்கள் படித்தவர்கள்; ஆதலால் இவர்களுக்கு மதிப்புக் கொடுத்து இவர்கள் கூறும் அறிவுரைகளை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்' என்று தெரிந்து கொள்வார்கள் என்பது இதன் உட்கோள். ஏதிலர் - தம்மோடு தொடர்புறுதற்கு ஏதோர் ஏதுவும் இல்லாதவர். அவர், பிறர். 'நொ' நீண்டு நோவதென்றாயிற்று.

---

* நாலடி. பிறர்மனை நயவாமை, அ.

(க-து.) ஏற்றுக்கொள்ளுந் தகுதியுடையவர்களுக்கே தாம் அறிந்த அறிவுநூற் பொருள்களைக் கூறுதல் வேண்டும். (௨௫)

## நன்மக்கள் மாட்சி

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகோல் பூட்கைக் களிறு.

(பொ-ள்') மாத் தகைய அந்தப் புரத்தது பூஞை - பெருமையையுடைய வீட்டினுள் இருப்பது பூனை, புறங்கடையது கந்து கொல் பூட்கைக் களிறு - அப் பெருமையில்லாத தலைவாயிலில் இருப்பது கட்டுத் தறியை முறித்துவிடக்கூடிய வலிமையுடைய யானை; (என்றாலும் வீட்டினுள் இருப்பதனால் பூனைக்கும், வெளியில் இருப்பதனால் யானைக்கும் யாதொரு பெருமையும் சிறுமையும் இல்லை); ஆகவே, மிகல் மக்கள் வேத்து அவை காவார்-மேன்மக்கள், அரசனுடைய அவையில் இருந்தாற்றான் பெருமை வருமென்று நினைத்து, அந்த அரசவையைக் காத்துக் கொண்டிருக்கமாட்டார்; (அதனால் அவர்க்கு வருத்தமென்பதும் ஒன்றில்லை); வேறு சிலர் காத்தது கொண்டு ஆங்கு உவப்பு எய்தார் - அம்மேன்மக்களுக்கு வேறான வேறு சிலர், அஃதாவது கீழ்மக்கள், அவ்வரசவையைக் காத்துக் கொண்டிருந்ததனால் ஏதும் மகிழ்ந்துவிடவுமாட்டார்.

(வி-ம்.) வேந்து அவை எனப்படுவது எதுகை நோக்கி வலித்து வேத்தவை எனப்பட்டது. காவார், காத்தது என்பன அரசனிடத்தில் அலுவல் பெறாதிருத்தலையும் பெற்றிருத்தலையும் குறித்தன. அலுவலைக் காவார் காத்து என்னுஞ் சொற்களாற் கூறினார்; அவ்வலுவல் அரசனிடத்ததேயானாலும் காத்துக் கிடப்பதாகிய இழிவையுடைத்தேயாம் என்றற்கு, மாத்தகைய அந்தப்புரம் என்றார். பிறரெல்லாம் கிட்டுதற்கு அரிதான பெருந் தன்மையுடைய வீட்டின் உள் அறை என்க. அஃது எல்லாரும் கிட்டுதற்கு அருமையான அரசவைக்கு உவமையாக வந்தது. பூட்கை-வலிமை. இஃதிப்பொருட்டாதல் "ஒடாப் பூட்கை"* என்றவிடத்துக் காண்க.

(க-து.) அறிஞர்கள் எங்கிருந்தாலும் அவர்கட்கு மதிப்புண்டு. (௨௬)

---

* திருமுருகாற்றுப்படை, ௨௪௭.

### தெய்வம் இவரெனல்

குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை.

(பொ - ள்.) குலமகட்குக் கொழுநனே தெய்வம் - நல்லொழுக்கமுடைய பெண்ணுக்கு அவள் கணவனே தெய்வமாவான், புதல்வர்க்குத் தந்தையும் தாயும் - புதல்வர்களுக்கு அவர்கள் தாய் தந்தையர்களே தெய்வமாவார்கள், அறவோர்க்கு அடிகளே தெய்வம் - நல்லொழுக்கமுடைய மாணவர்களுக்கு அவர்கள் ஆசிரியன்மாரே தெய்வமாவார், அனைவோர்க்கும் இலைமுகப் பைம்பூண் இறை தெய்வம்-இவரொழிய மற்றெல்லோருக்கும் இலை நுனி போன்ற பசும்பொன் நகைகளணிந்த அரசனே தெய்வமாவன்.

(வி - ம்.) கற்புடைய மனைவி இங்குக் குலமகளெனப்பட்டாள். தெய்வம் என்றது, தெய்வம்போலப் பார்க்கத்தக்கவர்கள் என்பதற்கு, தெய்வம் என்பதை இரண்டாம் அடியினுங் கொள்க. கொழுநனே என்பதில் உள்ள பிரிநிலை ஏகாரத்தை மற்றவற்றிற்குங் கூட்டுக. அறவோர் என்றார், மாணவர்கள் மற்றவற்றிற் பற்றுவையாது கல்வியிலே கருத்தூன்றித் துறவிகள் போல் நிற்றலின், அடிகள் ஆசிரியர்க்கு வருதலை "அன்னை தன்னைத் தாதையை அடிகள்தன்னை"* என்னுங் கந்தபுராணத் திருமொழியிற் காண்க. குலமகள், புதல்வர், அறவோர் என்பவர்கட்கு இன்னின்னார் தெய்வமென்று கூறிவிட்டமையின், அவரொழித்து மற்றையோரையே அனைவோர்க்கும் என்றார். அவ்வனைவோரென்பார் இல்வாழ்வாரென்க. இலைமுகப் பைம்பூண் என்பதை வெற்றிலை மூக்குப்போலச் செய்யப்பட்ட நகை என்று கூறுப. பைம்பொற்பூண் என்று வரற்பாலது பைம்பூண் என்று வந்தது. இஃது ஒரு மரபு வழுவமைதி யென்பர். கணவன், தாய், தந்தையர், ஆசிரியர், அரசன் என்பார், இறைவன் உயிர்கட்கு எவ்வகையான உதவி செய்கின்றானோ அதுபோன்ற உதவியையே உடனிருந்து அன்போடு அவ்வப்போதும் தன் மனைவி மாணவர் குடிமக்கள் என்பார்க்குச் செய்தலின், அவரெல்லாம் அவர்கட்குத் தெய்வமாவாரெனப்பட்டார். மன்ற - உறுதியாக எனப் பொருளுரைத்து எல்லாவற்றோடுங் கூட்டிக் கொள்க.

* கந்த, வீர. சo : உக.

(க - து.) மனைவி கணவனையும், மக்கள் பெற்றோரையும், மாணவர் ஆசிரியரையும், குடிமக்கள் அரசனையும் தெய்வமெனப் போற்றக் கடவர். (௨௭)

குடியோம்பல்

கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினுந்—தண்ணளியான்
மன்பதை ஓம்பா தார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கும் ஆணல் லவர்க்கு.

(பொ - ள்.) கண்ணின் சொலிச் செவியின் நோக்கும் இறை மாட்சி - கட்பார்வையால் கருத்து அறிவித்து நேரிற் பார்ப்பது போலக் காதினால் செய்திகளை அறியும் அரசனுடைய பெருமையான செய்கை, புண்ணியத்தின் பாலதே ஆயினும் - நல்வினையோடு சேர்ந்ததே ஆனாலும், தண் அளியால் மன்பதை ஓம்பாதார்க்கு - குளிர்ந்த அருள் நெஞ்சத்தாற் குடிமக்களை ஆளாத அரசர்க்கு, என்னுகும் - கண்ணிற் சொல்லிச் செவியில் நோக்கும் அரசாட்சிமுறை என்ன பயனும்?, ஆணல்லவர்க்கு வயப்படை என் பயக்கும்-பேடிகளுக்கு வெற்றி தரத்தக்க வில், வாள், வேல் முதலிய போர்க் கருவிகள் என்ன பயனைத் தரும்?

(வி - ம்.) தன்கீழ் வேலை செய்வோர்க்கும் குடிமக்களுக்கும் ஏனையோர்க்கும் காரியங்களை வாயாற் சொல்லாமல் அக்கருத்தை அவர்கள் தன் பார்வையினாலேயே அறிந்துகொண்டு செயற்படுமாறு பார்த்தலைக் 'கண்ணிற் சொலி' என்றார்; வாயின் வேலையைக் கண் செய்தலால், கண்ணுக்குச் சொல்லுந் தொழிலை ஏற்றினார். நேரிற்போய் ஒரு செய்தியை அறிந்தது போலவே தக்க ஒற்றர்கள் வாயிலாக அதைக்கேட்டு அறிந்து கொள்ளுதலால், 'செவியின் நோக்கி' என்றார். இவ்வகையான திறமை எல்லாராலும் இயல்வதன்றாதலால் அதனை 'மாட்சி' என்று கூறினார். அரசாட்சி செய்யவேண்டுவோர் இவ்வாறு செய்யவேண்டுமாதலால், இங்ஙனம் செய்யும் ஆட்சித் திறமை யில்லாதவர்கள் அரசராய்ப் பிறந்துவிடுவதனால் மட்டும் ஏதும் பயனில்லை யென்பதாம். அது போர் செய்யும் ஆற்றலில்லாதவன் கையில் வாளிருந்தும் பயனில்லையாதல் போல என்றார். "பேடிகை ஒள்வாள்" என்று நாயனர் இவ்வுவமையைக் கொண்டிருத்தல் காண்க. ஆணல்லவர்க்கு : ஒருசொன் னீர்மைத்தாய் ஆண்மைத் தன்மையில்லாத பேடிகளை உணர்த்திற்று.

(க - து.) ஆளுந் திறனும் அன்பும் இல்லாத அரசாட்சி பயனின்று. (௨௮)

## வரிவாங்கும் முறை

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலும் மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

(பொ - ள்.) குடிகொன்று இறைகொள்ளும் கோமகற்கு - குடிமக்களை வருத்தி வருத்தி வரி வாங்கும் அரசனுக்கு, கன்று ஆ மடி கொன்று பால் கொளலும் மாண்பே-கன்றையுடைய ஆவின் மடியினை வருத்திப் பால் கறப்பதும் நல்ல செயலாகும்; (இவ்வாறு வருத்தி வரிவாங்கும் அரசனிடத்தில் செல்வம் சேர்ந்திருக் கிறதோ வெனில் அதுவுமில்லை, ஆனல்,) குடி ஓம்பிக் கொள் ளுமா கொள்வோர்க்கு - குடிமக்களை அவர்கள் நலத்தில் கருத்து வைத்துப் பாதுகாத்து நல்ல முறையில் வாங்கும் வகையாக வரி யினை வாங்கும் அரசர்க்கு, மா நிதியம் வெள்ளத்தின் மேலும் பல காண்டும் - பெருமையுடைய பணம் வெள்ளத்தினும் மேலும் பலவாகக் காண்கின்றோம்.

(வி - ர்.) கொன்று என்றது, இங்கு வருத்தலுக்கு வந்தது. அது கொலை செய்தது போன்ற அத்துணை மிகுதியான வருத்தத் தைச் செய்தலாம். மடிகொன்று என்றதற்கும் அதுவே கருத்து. மடியைக் கொல்லுதலாவது அதனைக் கசக்கி உயிரோடு தோலுரிப் பதேபோல அதன் முலைக்காம்புகளை நோவ நோவ மிக அழுத்தி நீட்டி இழுத்தல். 'பால்கொளல்' என்னுங் குறிப்பினலேயே அவ் வானுக்குக் கன்றிருப்பது பெறப்படுமாயினும், பாலருந்தக் கன் றென்றிருக்கின்றதே என்பதையும் நோக்காமல் அது செய்வன் என்பதைக் குறிக்கக் 'கற்று' என்றார். கன்று ஆ என்பது வலித் துக் கற்றுவாயிற்று. "கற்றாவின் மனம்போல" என்பது திருவாசகம். வருத்தி வரிவாங்கும் அரசனுக்கு வருத்திப் பால் கறக்கும் செயற்கையும் நல்லதாய்த் தோன்றும் என்று கூறினர்: எத்துணைத் தீய செய்கையைச் செய்தற்கும் அவன் நெஞ்சம் ஒருப்படுமென்று அவன் கொடுமையை உணர்த்துதற்கும், பால் கொளல் இறைகொள்ளுதற்கு உவமையாதற்குமென்க. இறை- வரி; இதனை "அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன் றாயிற்று"* என்னும் பரிமேலழகருரையிற் காண்க. கொள்ளு மாறு: கடைக்குறை. "குடியோம்பிக் கொள்ளுமா கொள் வோர்க்கு மாநிதியங் காண்டும்" என்பதனல் குடிகொன் றிறை கொள்ளுங் கோமகற்கு அச் செல்வம் இல்லை என்பது குறிப்

---

* திருக்குறள், இல்வாழ்க்கை, ௩ - உரை.

பெச்சமாகப் பெறுதும்; மாநிதியம், பெரும்பணமன்று; பெருமையுடைய பணம் என்னை? மிகுதியைக் குறித்தற்கு 'வெள்ளத்தின் மேலும் பல' வென்று பின் வருதலாலும் வருத்தாது வாங்குவான்பணம் மிகுதியாதலோடு பெருமையுமுடைய தென்பதை இங்குக் குறித்திடல் இன்றியமையாததாதலாலும் என்க. கொள்ளுமா கொள்வார் பணம் பெருமையுடையதாம் எனவே, அங்ஙனங் கொள்ளாதார் பணம் குறைந்து போனதோடு பெருமையும் இலதாம் என்று கொள்க. வெள்ளம் ஓர் எண்ணென்றுங் கூறுப. வெள்ளத்தின் மேலும் பல என்னும் மூன்று சொற்களையும் மேலும் மேலும் மிகும் என்பதற்குக் கொள்க. ஏகாரம் இரண்டனுள் முன்னது தேற்றம்; பின்னது அசை.

(க - து.) குடிகளை வருத்தாது வரிவாங்குதல் அரசன் கடன். (உக)

அரசனுகான் இயல்பு

இன்று கோளற்பால நாளைக் கோளப்பொறுன்
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன்.

(பொ - ள்.) இன்று கொளற்பால நாளை கொளப் பொறுன்-இன்று கொள்ளத்தக்க பொருள்களை நாளைக்கு வாங்கிக்கொள்ள ஒருநாள் பொறுக்கமாட்டான்; நின்று குறை இரப்ப நேர்படான்-சற்று நேரம் எதிரே நின்றுகுடிகள் தங்கள் குறைகளைச் சொல்லி வேண்டிக்கொள்ள அகப்படமாட்டான்; ஒருவன் சென்று ஆவன கூறின் எயிறு அலைப்பான் - ஒருவன் எதிரேபோய்த் தனக்கு வேண்டியவைகளைக் கூறினல் பல்லைக் கடித்து அச்சுறுத்துவான்; ஆறு அலைக்கும் வேடு அலன் வேந்தும் அலன் - இப்படிப்பட்டவன் வேடனும் அல்லன் அரசனும் அல்லன்.

(வி - ம்.) இன்று கொளற்பால - இன்று கொள்ளும் பான்மையை யுடையவை. நின்று குறையிரப்ப - பொறுமையாய்க் குறையிரத்தல் என்றுமாம். நாளைக் கொளப் பொறுனயினும், அங்ஙனம் ஒருநாள் பொறுக்குமாறு குடிமக்கள் தமக்குள்ள குறைகளைச் சொல்லிக்கொள்ளலாமென்றாலும் அதற்கும் நேர்படான். ஏதோ நல்ல காலமாக நேர்பட்டானயினும் அவர்கள் தமக்கு ஆவன கூறும்பொழுது அதனை ஏற்றுக்கொள்ளாமல் எயிறலைப்பான்; இவன் எதற்கும் பயனில்லை என்றிவ்வாறு பொருட்டொடர்பு செய்க. குறையிரப்ப: ஒரு சொன்னீரது. இரப்பாரைப் போல நின்று தங்குறை கூறுதலுணர்த்திற்று. இதனை இரண்

டாகப் பிரித்து இடர்ப்படுவாருமுளர். இங்ஙனமே எயிறலைத்தல் ஆறலைத்தல் என்பன பண்டுதொட்டே பற்கடித்தல் வழிப்பறித்தல் என்னும் பொருள்மேலாகவே வருதலின், ஒருசொன்னீர்மைய வென்று கொள்க. நேர்படல் - ஒத்து நிற்றல், இங்குக் குறையிரத்தல் வேண்டுமென்று வந்த குடிமக்களின் கருத்தோடு அரசன் அதனை முடிக்கவேண்டுமென்று ஒத்து நிற்றலை உணர்த்திற்று. அரசு அமைச்சுப் போல வேடு வேந்து பண்பாகு பெயர்கள். காட்டில் நின்று பறியாமையாலும் வெளிப்படையாய்ப் பறியாமையாலும் வேடனல்லன் என்றும், குடிகளிடத்தில் தண்ணளியில்லாமையாலும் முறையாகப் பாதுகாவாமையாலும் வேந்தனல்லன் என்றுங் கூறினர்.

(க - து.) அரசன் குடிகளின் நலத்திற் கருத்துடையனுதல் வேண்டும். (கூo)

அரசபோக மயக்கம்

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப உடுத்துண்ப உண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறின் சேவிக்கோளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

(பொ - ள்.) முடிப்ப முடித்து-முடிக்கத்தக்க மலர் முதலியவைகளை முடித்துக்கொண்டு, பின் பூசுவ பூசி - அதன் பின்பு பூசத்தக்க கலவை முதலியவைகளைப் பூசிக்கொண்டு, உடுப்ப உடுத்து - உடுக்கத்தக்க பட்டாடை முதலியவைகளை உடுத்துக்கொண்டு, உண்ப உண்ணு - உண்ணத்தக்க நறுநெய்யுணுக்களை உண்டு (உயிர்த்தன்மை காட்டி), இடித்து இடித்துக் கட்டுரை கூறின் - பலமுறை நெருக்கி நெருக்கி அறிவுரை கூறினும், செவிகொளா கண்விழியா - காது கொள்ளாதனவாய்க் கண் திறந்து பாராதனவாய்ப் பிணத்தன்மை காட்டி நிற்கும் அரசர்கள், நெட்டுயிர்ப்போடு உற்ற பிணம் - பெருமூச்சோடு கூடிய பிணங்களே யாவார்கள்.

(வி - ம்.) முடிப்பதும் பூசுவதும் உடுப்பதும் உண்பதுமான செயல்களெல்லாம் உயிரிருப்பதுபோற் காட்டுகின்றன. ஆனால் கேளாமையும் பாராமையும் உயிரில்லாததுபோற் காட்டுகின்றன. உயிருக்கு முதன்மையான தன்மை அறிவே ஆதலின், அதன் செய்கைகளான கேட்பதும் பார்ப்பதும் இல்லாத அரசர்களைப் 'பிணம்' என்றே கூறல் வேண்டினர். ஆனல் அவ்விறந்த பிணத்தினின்றுஞ் சிறிது வேற்றுமை காட்டுதற் பொருட்டு நெட்டுயிர்ப்

போடுற்ற பிணமென்றூரென்க. முடிப்ப, பூசுவ, உடுப்ப, உண்ப- செவிகொளா, கண்விழியா : வினையாலணையும் பெயர்கள். கடைசி இரண்டினை முற்றாகக் கொள்ளலுமாம். உண்ணு நின்று என்பது கடை குறைந்து உண்ணு என்று நின்றது. இடித்திடித் துக் கூறல்-வெட்கம் வருமாறு நெருக்கிக் கூறல். *"மிகுதிக்கண் மேற்சென் றிடித்தல்" என்பது திருக்குறள், கட்டுரை – பொருள் பொதிந்த சொல்; உறுதியுடைய சொல்லுமாம்† என்பது அடியார்க்குநல்லாருரை. கூறின் என்றவிடத்து இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது.

(க - து.) அறிவும் இரக்கமும் இல்லாதவர்கள் பிணங்க ளுக்கு ஒப்பாவார்கள். (௩௧)

### செங்கோன்மை

ஒற்றின் தேரியா சிறைப்புறத் தோர்துமெனப்
போற்றேள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
அறிவரிதேன் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

(பொ - ள்.) ஒற்றின் தெரியா - வேவுகாரரால் தெரியப் படாத உண்மைகளை, சிறைப்புறத்து ஓர்தும் என-ஒதுக்கிடங் களிலிருந்து தெரிந்துகொள்வோம் என்று, பொன் தோள் துணையா தெரிதந்தும்-பொன்னலான வீரவளை அணிந்த தனது தோளே தனக்குத் துணையாக நினைத்துக்கொண்டு போய் அங் கிருந்து அவைகளைத் தெரிந்துகொண்டும், குற்றம் அறிவரிது என்று அஞ்சுவதே செங்கோன்மை - குடிமக்களின் செய்கை களில் குற்றமாவன இவைதாம் என்று துணிதல் அருமையான தென்று நினைத்து அக் குற்றங் காண்டலுக்கு அஞ்சுவதே நல்ல அரசாட்சி முறையாகும், (அதுவே முறையாமன்றிச்) சென்று முறையிடினுங்கேளாமையன்று-குடிமக்களே போய்த் தங்குறை களைச் சொல்லிக்கொண்டாலும் அதனைக் கேளாமலிருப்பது முறைமையன்று.

(வி - ம்.) இச்செய்யுள் அரசனவான் குடிமக்களின் நலங் களை அவர்க ளிருக்குமிடத்தில் வேவுகாரர்களை அனுப்பிவரச் செய்து அவர்கள் வாயிலாகத் தெரிந்துகொள்வதுமன்றி, அவர்க ளாலும் தெரிந்துகொள்ளப்படாத உண்மைகளைத் தன் தோளே துணையாகத்தானே நேரிற்சென்று அறிவதும், அங்ஙனம் அறித்து விடத்தும் அவர்பாலுள்ள குற்றங்களை அறியாதொழிவதுமே

*குறள், நட்பு, ௪. †சிலப். பதிகம், ௬௪ இன் உரை.

நல்ல அரசாட்சி முறையாமன்றி, அவ்வாறு தன் ஒற்றர்களாதல் அல்லது தானுதல் போய் அவர் நலங்களை அறியாதொழிதலும், குடிமக்கள் தாமாகவாவது தன்னிடம் வந்து முறையிட்டுக் குறையிரக்கும்போதுகூட அதனைக் கேளாமலிருப்பதும் முறையன்றும் என்பதுணர்த்திற்று. ஒற்று என்பது இங்கு நட்பினர் பகைவர் அயலவர் ஆகிய மூவகையாரிடத்தும் வேற்றுமையின்றி அவர்க்கு அவர்போல அவரோடு கலந்து அவ்வவரின் உண்மைச் செய்தியை அறிபவரை உணர்த்தும், தெரியா: வினையாலணையும் பெயர். போமிடத்துத் தனக்கு ஏதேனுந் தீங்குவரினும் போரிட்டுக் கண்டு வருவன் என்பதற்குப் 'பொற்றுள் துணையா' என்றார். தெரிதருதலென்பது இங்கு இறந்தகாலத்தின் கண், தெரிதந்து. என்று வந்தது; தெரிந்து என்பது பொருள்.

(க - து.) அரசனுக்குக் குடிமக்களிடத்தில் நன்மை காண்டலிலேயே கருத்திருக்க வேண்டும். (௩௨)

அரசன் பேரறிவு

ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதோரீஇக் கோள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சோலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

(பொ - ள்.) காக்கை நேர் நின்று-காக்கையின் எதிரிலேயே நின்று கொண்டு, வெளிது என்பார் - அக் காக்கை வெண்மையானது என்று உண்மைக்கு மாருகப் பேசுபவர், என் சொலார் - வேறு எதைத்தான் சொல்லமாட்டார்கள், தாய்க் கொலை சால்புடைத்து என்பாரும் உண்டு-தாயைக்கொலை செய்தல்கூடப் பொருத்தமானதே என்று சொல்பவர்களும் உலகத்தில் இருக்கிருர்கள்; ஆதலால், ஏதிலார் யாதும் புகல-பிறர் தமக்குத் தோன்றியவாறெல்லாம் சொன்னாலும், இறைமகன் கோது ஓரீஇக் கொள்கை முதுக்குறைவு - அரசனுவான் அவர்கள் கூறுவதிற்குற்றமானவற்றையெல்லாம் நீக்கிவிட்டு நல்லனவற்றை மட்டுங் கொள்ளுதல் பேரறிவாகும்.

(வி - ம்.) குடிமக்கள் வழக்கிட்டுக்கொண்டு ஒருவர்மேலொருவர் அழுக்காறு முதலியவற்ருற் பொருந்தாதனவுங் கூறுவராதலால், அரசனுவான் அவர் கூற்றுக்களை அப்படியே எடுத்துக்கொள்ளாமல் அவற்றிற் பொருந்துவனவே எடுத்துக் கொள்ளுமாறு கூறிற்று. முதுக்குறைவு: ஒரு சொன்னீர்மைத்

தாய்ப் பெரிய அறிவினை உணர்த்திற்று. "மூதுக்குறைவி"*என்பதற்கு அடியார்க்கு நல்லார் 'பெரிய அறிவுடையாள்' என்றது காண்க.

(க - து,) எதனையும் ஆராய்ந்து பார்த்துப் பொருந்துவன கொள்வது அரசன் கடமை. (௩௩)

## மூடர் கேடறியாமை

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ உணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணம் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

(பொ - ள்.) மண்டு எரி-மிகுந்த நெருப்பு,வாய் மடுப்பினும்-சூழ்ந்து எரிந்தாலும், மாசுணம்-பெரிய பாம்புகள், பெருமூச் செறிந்து-பெருமூச்சு விட்டுக்கொண்டு, கண் துயில்வ-தூங்கிக் கொண்டிருக்கும்; பேரா-அவ்விடத்தினின்றும் அசையா; (அது போல) கேடு கண்கூடாப்பட்டது எனினும்-தமக்கு வருங் கெடுதிகளை நேராகவே பார்த்தார்களானாலும், கீழ்மக்கட்கு உண்டோ உணர்ச்சி-கீழ்மக்களுக்கு அவைகளினின்றுந் தப்பிப் பிழைக்கும் உணர்ச்சி உண்டோ; இல்லாகும் - இல்லையாகும்.

(வி - ம்.) கண்கூடு: ஒரு சொன்னீரதாய்க் கண்ணுக்குக் கூடுவதான கட்பார்வையை யுணர்த்திற்று. கண்கூடாகப் பட்டது-நேரே கண்ணாற் பார்க்கப்பட்டது. மற்று, தான்: அசை. மண்டெரி-பெருந்தீ என்பது நளவெண்பா. வாய்மடுத்தல்-உண்ணுதல், மூச்செறிதல்: ஒருசொல் தன்மைத்து.

(க - து.) எத்துணைக் கெடுதி வருவதாயினும் கீழ்மக்கள் மீண்டும் மீண்டுந் தீய செயல்களையே செய்வர். (௩௪)

## கேட்டின் குறி

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

(பொ - ள்.) நட்புப் பிரித்தல் - நண்பர்களைப் பகையாக்கிக் கொள்ளலும், பகை நட்டல்-பகைவர்களை நட்பாக்கிக்கொள்ள

* சிலப், கொலைக்கள. ௬அ.

லும், ஒற்று இகழ்தல்-வேவுகாரர்களை இழித்துரைத்தலும், பக்கத்தார் யாரையும் ஐயுறுதல் - பக்கத்திலுள்ள எல்லாரிடத்திலும் ஐயுறவு கொள்ளலும், தக்கார் நெடுமொழி கோறல்-பெரியோர்களுடைய அறிவுரைகளை மீறலும், குணம் பிறிது ஆதல்-இயல்பான தன்மைக்கு மாறுதலும் (ஆகஇந்த ஆறு பொருந்தாத செயல்களும்), கெடுவது காட்டும் குறி-பின்னால் வரும் கெடுதிகளைக் காட்டும் அடையாளங்களாம்.

(வி - ம்.) நட்பு, பகை என்பன பண்பாகு பெயர்களாய் அவை தம்மையுடையாரை உணர்த்தின; ஒற்று: தொழிலாகு பெயராய் எல்லாரிடத்தும் ஒன்றியிருப்பாரை உணர்த்திற்று. நெடுமொழி-பெருமையுடைய மொழி; அஃது அறிவுரை. நட்புப் பிரித்தல் முதலிய ஆறையும் உடையார்க்குக் கேடு வரும் என்க.

(க - து.) நட்புப் பிரித்தல் முதலியன செய்யலாகாது.

(௩௫)

பெரியாரைப் பிழைத்தல்

பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினால் தாழ்வார்க்—கணிய
திளையாள் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
தொலையாத* போகங் கொளல்.

(பொ - ள்.) பணியப்படுவார் புறங்கடையராக - தம்மால் வணங்கி எதிர்கொள்ளத்தக்க பெரியார் தம்முடைய தலைவாயிற்படியில் வந்து நின்றனராக, தணிவுஇல் களிப்பினால் தாழ்வார்க்கு - அடங்குதலில்லாத செல்வக்களிப்பினால் அவரை எதிர்கொள்ள கூசுவார்க்கு, அணியது இளையாள் முயக்கு எனினும் - திருமகளின் சேர்க்கை அப்போது அவர்க்கு நெருக்கமாயிருக்கின்றதானாலும், சேய்த்து அன்றே மூத்தாள் தொலையாத போகம் கொளல்-மூதேவியின் ஒழியாத சேர்க்கையை மேற்கொள்ளுதலும் அவர்களுக்குத் தொலைவில் இல்லை.

(வி - ம்.) ஆகவே, பெரியாரை மதியாது செல்வக் களிப்பினாற் செருக்குவார்பால் உள்ள திருமகள் நீங்கியொழிய மூதேவி விரைவிலே வந்துசேருவள் என்க. அவர்கட்கு அச் செல்வம் அழிந்துபோம் என்பது கருத்து. அணியது சேய்த்து என்பவற்றைக் காலஅளவுக்குக் கொள்க.

---

* 'தொலையாத' என்னும் இச்சொல் ஓர் ஏட்டுப்படியிற் கண்டது. †"புணர்முலைப்போகம்" என்பதும் பாடம்.

(க - து.) செல்வத்தைவிடப் பெரியாரையே பெருஞ் செல்வமாகப் பேணவேண்டும். (நகூ)

சான்ருண்மை

கண்ணேக்கு அரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

(பொ - ள்.) கண்ணேக்கு அரும்பு ஆ-அருள் ஒழுகு கண்ணின் பார்வையே மொட்டாகவும், நகைமுகமே நாள்மலரா-மகிழ்ச்சியான் மலர்ந்த முகமே புதுப்பூவாகவும், வாய்மையின் இன்மொழியே தீம்காயா - மெய்ம்மையான இன்சொல்லே தித்திப்பான காயாகவும், வண்மை பலம் ஆ - ஈகையே பழமாகவும், கொண்டுள்ள நலம் கனிந்த பண்பு உடையார் அன்றே சலியாத கற்ப தரு - நன்மைகள் மிகுந்த பெருந்தன்மையுடைய செல்வர்களல்லரோ சலித்தலில்லாது ஈயும் கற்பக மரமாவர்.

(வி - ம்.) கண்ணேக்கு - அருட்பார்வைக்கே சிறப்பாக வழங்குதலை 'என்மேல் கண்ணேக்கம் வை' என்பதிற் காண்க. நாள்மலர்-அன்று மலர்ந்த புதுப்பூ. இன்மொழியின் வாய்மையே என்பதை மற்றவற்ருேடும் ஒத்து நிற்றற்பொருட்டு முன்பின்ஞக மாறுக. இங்கு வாய்மை யென்றது, உள்ளும் புறமும் ஒத்து நிற்றலை. வண்மை என்பதை 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்னும் உத்திபற்றி ஈற்றில் நிறுத்தினர். இச்செய்யுளின் முதன்மையான கருத்து அதுவாதலின், கண்ணேக்கு நகைமுகம் இன்மொழி எனவரும் ஏனைய மூன்றும் இவ் வண்மையைச் சிறப்பிக்க வந்தனவென்று கொள்க. இங்ஙனம் கருத்திலிருத்திச் செய்யுளியற்று முறையை மாணிக்கவாசகப் பெருமானுரியற்றிய திருச்சிற்றம்பலக் கோவையாரின் முதற் பாட்டினும் அதற்குப் பேராசிரியர் கூறும் உரையிலுங் கண்டுகொள்க.

(க - து.) விரும்பிப் பார்த்தல் முகமலர்ச்சி முதலிய குணங்களையுடைய செல்வர் கற்பகமரம் போலப் பயன்படுவர். (நஎ)

செல்வரின் ஈகைப்பயன்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிருே துயருரு—ஆங்கதுகொண்
டூரும் எறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

(பொ - ள்.) வாங்கும் - தான் எடுத்து உட்கொள்ளும், கவளத்து - ஒருவாய் உணவினின்று, ஒரு சிறிது-ஒரு சிறிது உணவு, வாய் தப்பின்-வாய் தவறிக் கீழே விழுந்தால், (அதனால்) தூங்கும்-அசையா நிற்கும், களிறோ - யானைகளோ, துயர் உறு - வருத்தமடையா, அதுகொண்டு-தவறிய அவ்வுணவைக்கொண்டு, இங்கு-இவ்வுலகில், ஊரும் எறும்பு ஒரு கோடி-ஊருகின்ற எறும்புகள் ஒரு கோடி, ஆரும் கிளையோடு - தங்கள் நிறைந்த சுற்றத்தோடு, அயின்று - உண்டு, உய்யும் - பிழைக்கும்.

(வி - ம்.) யானைவாயினின்றுந் தவறிய சிற்றுணவால் ஒரு கோடி எறும்புகள் உயிர்வாழும் என்பதனால், ஒட்டணி கூறப்பட்டது. களிறு, பொதுமையில் நின்றது. ஆல்: அசை. அயின்று-இறந்தகால வினையெச்சம். 'அயில்' பகுதி. லகரமெய் னகர மெய்யாகத் திரிந்தது சந்தி. ற்: இடைநிலை; உ: விகுதி. கிளை - கிளைத்தல்: முதனிலைத்தொழிலாகு பெயர். "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்.' பெற்றத்தால் பெற்ற பயன்"* என்பது திருக்குறள், கவளம் - ஒரு வாய் உணவு. வாங்கும் கவளம் என்றவிடத்து, பாகன் கொடுக்க யானை வாங்கி உண்ணும் ஒரு வாயுணவு எனலுமாம்.

(க - ரை.) பெருஞ் செல்வமுடையவர் அதனில் ஒரு சிறு பகுதியைத் தானமாக வழங்குவராயின் அதனால் எத்தனையோ உயிர்கள் பிழைக்கும். (௩அ)

அரசன் நன்மதிப்பு

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் ஏக்கழுத்தம் மிக்குடைய—மாகோல்
பகைமுகத்த வேள்வேலான் பார்வையில் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

(பொ - ள்.) பகை முகத்த - பகைப்புலத்துள்ள, மா - (தன் பகைவராகிய) விலங்குகளையெல்லாம், கொல் - கொல்லுந் திறனுடைய, வெள் வேலான் - ஒளிமிக்க வேலேந்திய அரசன், நகை முகத்த - (தன்) மலர்ந்த முகத்திற் காணும், பார்வையின்-பார்வையில், தீட்டும் - தோற்றுவிக்கும், நன்கு மதிப்பு-நன்மதிப்புக்கள், மாகம் - வானும், சிறுக - குறையும்படி, நிதிக்குவை குவித்து-(அவ்வளவு பெரிய) பொருட்குவியலைக் குவித்து, ஈகையின்-அவைகள் முழுமையும் அவரவர் தகுதிக்கேற்ப அவ்வரசன் அள்ளிக் கொடுத்தலைப் பார்க்கிலும், ஏக்கழுத்தம் - செம்மாப்பு, மிக்குடைய - பெரிதுடையவாகும்.

*திருக்குறள். சுற்றந்தழால், ௪.

(வி - ம்.) "மாகஞ் சிறுக" என்றது நிதிக்குவையின் பெருக்கத்துக்கு. அவரவர் தகுதிக்கேற்ப அளவு செய்து நோக்குதலால் பார்வையிற் றீட்டும் என்று கூறினர். ஏக்கழுத்தமுடைமை யாவது அரசன் கண்ணோட்டமிருப்பதால் இனி நமக்கு யாதுங் குறைவில்லை; எவர்க்கும் அச்சம் இல்லை என்று தோன்றும் உள்ளக் கிளர்ச்சியும், அக் கிளர்ச்சியாலேற்படும் செம்மாப்பும். 'மிக்கு' மிக என்னுஞ் செயவெனெச்சத்திரிபு. ஈகை: தொழிற் பெயர். முகத்த: குறிப்புப் பெயரெச்சம். அரசன்பால் குறையிரந்து நிற்கும் ஒருவனுக்கு அவ்வரசன் அளவற்ற பொருட்குவியலை அளிக்கிறான் என வைத்துக்கொள்வோம். அவ்வாறு பொருட்குவை பெற்று அகன்றபின், அரசன் அவனைப்போல் தன்னிடம் வந்து குறையிரந்த பல்லாயிரக்கணக்கான வறியரில் ஒருவனாய் எண்ணி அந்நேரமே அவனை மறந்துவிடுவன். ஆனால் அங்ஙனமின்றி எப்பொழுதும் அரசனது கண்ணோட்டம் அவனுக்கிருப்பின் அவன் யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை. அவனை நாடிவருவோர் பலர் இருப்பர். அதனால் அவனுக்கு எப்போதும் மனமகிழ்ச்சியும் செல்வாக்கும் இருந்துவரும்.

(க - ரை.) அரசனிடத்திலே அளவற்ற பெரும்பொருளைப் பரிசாகப் பெறுவதினும், அவனாலே நன்கு மதிக்கப்படும் பேறு பெறுதல் ஒருவர்க்கு மிக்க மேம்பாட்டைக் கொடுக்கும். (௩௧)

அடைக்கலங் காத்தல்

களைகணாத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம்பு ஓம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம்.

(பொ - ள்.) ஊன் உடம்பு - இறைச்சியாலாகிய இவ்வுடல் தளர்நடையது என்று - (பிணி, மூப்பு, சாக்காடு முதலியவைகளால்) நிலைதளருந் தன்மையுடையது என்று கருதி (அதனால் அதை வெறுத்து), புகழுடம்பு ஓம்புதற்கே-(நிலைதளராத) புகழ் உடம்பினை வளர்க்கவே, உடம்பட்டார்கள்-தீர்மானித்தவர்கள், தம் களைகண் ஆக அடைந்தவர்க்கு-தம்மை ஆதாரமாக அடைந்தவர்க்கு, உற்ற உழியும் - (சிறிது துன்பம்) வந்தவிடத்தும், மற்றும் ஓர் விளைவு உன்னி - வேறொரு பயனைக் கருதி, வெற்றுடம்பு தாங்கார் - பயனில்லாத (தமது) ஊன் உடம்பினைப் பாதுகாக்க நினையார்.

(வி - ம்.) அரசர்க்கரசன் சிபி, புருவின் பொருட்டுத் தன்னுயிர் கொடுத்ததும், தேவர் துன்பம் நீங்கத் ததீசிமுனிவர் தம்

முதுகெலும்பு ஈந்ததும், பாபர் தம்மகன் பிழைக்கவேண்டி அவனுக்கு வந்த காய்ச்சலை ஒரு பெரியார் கூறியபடி தாம் ஏற்றுத் தம் மகனுயிர் காப்பாற்றியதும், புகழுடம்பு விரும்பு வார் தம் ஊனுடம்பைப் பொருட்படுத்தார் என்பதற்குத் தக்க சான்றாகும். "ஏவரெனினும் இடருற்றனராகி, ஓவில் குறை யொன் றுளரேல் அது முடித்தற்கு ஆவிவிடினும் அறனே" என்பது கந்தபுராணம், களை கண் - நீக்குமிடம், ஊனுடம்பு: மூன்றும் வேற்றுமை உருபும் பயனும்உடன்றொக்க வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். புகழுடம்பு: இருபெயரொட்டுப் பண் புத்தொகை. "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார், என்பு முரியர் பிறர்க்கு" என்பது திருக்குறள்.

(க - து.) புகழை விரும்புகிறவர்கள் தம் உயிரைக் கொடுத் தேனும் தம்மை யடைந்தோர்க்கு உற்ற துயரை ஒழிப்பர். (௪0)

மான வலியின் உயர்வு

தம்முடை யாற்றலும் மானமுந் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

(பொ - ள்.) பின்னர் - இனிமேல், சிறுவரை ஆயினும் - சிறிது காலமாயினும், மன்ற - திண்ணமாக, தமக்கு இறுவரை இல்லை எனின் - தமக்குச் சாங்காலம் இல்லையானால், தம்முடைய ஆற்றலும் மானமும் தோற்று தம்முடைய வலிமையையும் மானத்தையும் இழந்து, தம் இன்னுயிர் - தமது இனிய உயிரை, ஓம்பினும் ஓம்புக - காக்கினுங் காக்க.

(வி - ம்.) பிறந்தபோதே இறப்பு உண்மையாகலின், வலியும் மானமும் இழக்காது வாழவேண்டும் என்க. போர்முகத்தும் பகைவர்க்குப் புறங்காட்டல் வலியிழத்தல்; இழிதொழில் செய்து பிறரால் அவமதிக்கப்படலும் தண்டிக்கப்படலும் மானம் இழத்தல்: "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந் தகைமை, பீடழிய வந்த விடத்து" என்பது திருக்குறள். ஓம்பி னும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. ஆங்கு: அசைநிலை. பிறந்த உயிரெல்லாம் என்றேனும் ஒருநாள் இறந்தே தீரும். இறவாத உயிரெதுவும் மண்ணிலில்லை. ஆசிரியர் குமரகுருபர அடிகள் தம் முதற்செய்யுளிலேயே இவ்வுண்மையை விளக்கி மண்ணிற் பிறந் தார்க்கெல்லாம் இறப்பு உண்டாகையால் 'எம்பிரான் மன்று வழுத்தாத தென்னே நமரங்காள்' என்று கூறி வருந்தினர்.

(க - து.) தமக்கு இனி இறத்தல் இல்லை என்று உறுதியாக உணர்ந்தார் தம் வலிமையையும் மானத்தையும் இழந்தேனும் தம் உயிரைப் பாதுகாக்க. (௪௧)

மானங் காப்பவர்

கலனழிந்த கற்புடைப் பெண்டிரும் ஐந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்—கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரும் அஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்.

(பொ - ள்.) கலன் அழிந்த - மங்கல நாண் இழந்த, கற்புடைப் பெண்டிரும் - கற்புடைய பெண்களும், ஐந்து புலன் ஒருங்க - மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும்) ஐம் புலன்களுந் தம் வசப்பட, பொய் ஒழிந்தாரும் - பொய்ம்மையினின்று நீங்கினோரும், கொலைஞாட்பின் - யுத்தகளத்தின் கண்ணே, மொய்ம்பு உடை வீரரும் - வலிமையுடைய வீரர்களும், முரன் மறலி - வலிமைமிக்க நமன், தும்பை முடிசூடினும் - தும்பைப்பூமாலையைத் தன் முடியின் அணிந்து எதிர்ப்பினும், அஞ்சார் - (தமது) நிலை கலங்கார்.

(வி - ம்.) ஒருங்கு : பகுதி, உகரக்கேடு சந்தி, அ : விகுதி, தும்பை மாலை - போர் செய்தற்கு அணியும் மாலை. தும்பை என்னும் முதற்பொருள் அதன் சினையாகிய மலர்க்கு ஆனமையால் பொருளாகு பெயராகவும், பின்பு அம் மலரால் ஆன மாலைக்கானமையாற் கருவியாகு பெயராகவும் வருதலின், 'தும்பை' இருமடியாகு பெயர். மறலி - மறத்தொழில் (கொடுந் தொழில், அஃதாவது கொல்லுதல்) செய்வதால் மறலி எனப் பட்டான். கணவரை இழந்து கற்புநிலை தவறாத பெண்கள் இயல்பாகவே தம் வாழ்நாளில் வெறுப்புற்றிருப்பர்; அன்னார் தம் கணவர் இருக்குங்கால் தாம் வாழ்க்கையில் இன்பமாய்க் காலங்கழித்ததும் அன்னார் இறந்தபின் தம் உலக வாழ்க்கை தமக்கு எப்போதும் மகிழ்ச்சியற்றிருப்பதுங் கண்டு இறப்புக்கு ஆயத்தமாயிருப்பர். ஐம்புலன் வென்ற துறவிகட்குஉலகப்பற்றே யிராதாதலின், அவர்களும் இறப்பை வெறார்.

வீரர் வீரருலகு விரும்பிப் போரில் தம் பகைவருடன் எதிர்த்து நிற்குங்கால் தம் உயிரைத் துரும்பாக மதித்துத் தமக்கு அல்லது எதிரிக்கு வெற்றிகாணு மளவும் வீரமுடன் சண்டை செய்வர். தாம் தோற்க நேர்ந்துழி மானங்காப்பான் தம் இன்னுயிரை அக் கொலைக்களத்திலேயே கூற்றுவனிடம் ஒப்

படைப்பர். "கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும், ஆற்றலதுவே படை" என்பது திருக்குறள்.

(க - து) கற்புடைய கைம்பெண்களும், ஐம்புலன் வென்ற துறவிகளும், அஞ்சா நெஞ்சு படைத்த போர் வீரர்களும் இறத்தற்கும் அஞ்சாது தம் மானத்தினைக் காப்பர். (சஉ)

மெய்ப்பயனுடையார் இறத்தற் கஞ்சார்

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.

(பொ - ள்.) விழலர் - (அறிவில்லா) வீணர்: புழு நெளிந்து - புழுக்கள் நெளிய, புண் அழுகி-புண்ணு யழுகி, யோசனை நாறும் - யோசனை தூரத்துக்கு நாறுகின்ற, கழி - மிகுந்த. முடைநாற்றத்த ஏனும் - தீ நாற்றத்தையுடையவாயினும், விளிவு உன்னி - சாதலை நினைந்து. வெய்து உயிர்ப்பர் - பெருமூச்செறிவர்; (ஆனால்), மெய்ப் பயன் கொண்டார் - தாம் உடம்பெடுத்த பயனை முயன்று அடைந்த அறிஞர், சுமை போடுதற்கு - (இவ்வுடம்பாகிய) சுமையை வீசி எறிய, சுளியார் - வெறுப்புக்கொள்ளார்.

(வி - ம்.) சுமை சுமப்போன், சுமை தாங்காது அதைக் கொண்டுபோய் இறக்குமிடம். வருமட்டும் வருந்தி நடந்து அவ்விடங் கண்டவுடன் மகிழ்ச்சியால் தன் தலைமீதிருக்குஞ் சுமையை இறக்கி மனமகிழ்தல்போல், உடம்பெடுத்த பயனறிந்த அறிஞர் அவ்வுடம்பாகிய சுமையைச் சுமந்து திரிய வருத்தமடைந்து அச்சுமையைப் போடுங் காலங் கண்டால் மகிழ்ச்சி கொள்வாராகையால் 'சுமை போடுதற்குச் சுளியார்' என்றார். "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க, லுற்றார்க் குடம்பு மிகை" என்பது திருக்குறள்.

(க - து.) தாம் உடலெடுத்த பயனையடைந்த அறிஞர் இறத்தற்கு அஞ்சார். (சங)

மன்னனெப்படி மன்னுயிரப்படி

இகழின் இகழ்ந்தாங் கிறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப—இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செயும்
நீர்வழிப் பட்ட புணை.

(பொ - ள்.) நீர் வழிப்பட்ட புணை - நீர்செல்லும் வழியே செல்லும் தெப்பம், (அதுபோல்) மன்பதை - மக்கட்கூட்டம், இகல் மன்னன் - வலிமையுடைய அரசனது, சீர் வழிப்பட்டது- ஆணை ஒழுங்கின் வழியே செல்லும், மற்று என்செயும் - அவ் வழியிற் செல்லாது வேறு என்ன செய்யும்? (அஃதெவ்வா றெனில்). இறைமகன் - அரசன், ஒன்று இகழின் - ஒருபொருளை இகழ்ந்தால், ஒக்க இகழ்ந்து (தாமும் அரசனோடு) கூட அதை இகழ்ந்து, புகழினும் - (அவன் அப்பொருளை) புகழ்ந்தால், ஒக்க புகழ்ப - தாமும் கூட ஒத்துப் புகழ்வர்.

(வி - ம்.) ஒன்று : எண்ணுகு பெயர். அரசனுறங்கினுஞ் சென்று உலகங் காக்கும் அவன் கடவுள்தன்மை, இங்குச் சீர் எனப்பட்டது. "உறங்கும்போதுந்தன்னருளாணை யுலகெங்கும், அறங்குன் றுவாக் காப்பதை யென்ப" என வருவதுங் காண்க. ஒக்க : ஓ: தனி வினைப்பெயர் ; கு : சாரியை; அ : பெயரெச்ச விகுதி; ககரம் இரட்டித்தது சந்தி, ஒக்க - ஒத்துநிற்க.

(க - து.) அரசன் ஆணைவழியே குடிகள் ஒழுகுவர். (சச)

### அமைச்சரியல்பு

சேவிசுடச் சென்றுங் கிடித்தறிவு முட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவிழ்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு.

(பொ - ள்) பாகு - பாகன், எத்திறத்தும் - எவ்வகை யாலும், கவிழ் மதத்த - பொழியும் மதத்தினையுடைய, கைமா - யானையின், வயத்ததோ - வயத்தினனுவனே, (அதுபோல்) அமைச்சு - அமைச்சர்கள், எத்திறத்தும் - எவ்வகையாலும், அம் மாண்பினவே - அத்தன்மையரேயாவர், (ஆகையால்) சென்று - (அரசன் தன் நெறி தவறினல் அவனிடத்துப்) போய், செவி சுட - (அவன்) செவிகள் வருந்தும்படி, இடித்து - (அவன் குற்றங் களை எடுத்துக்காட்டி) இடித்துரைத்து, அறிவுமுட்டி -(அவனுக்கு) அறிவுவரச்செய்து, வெகுளினும் - (அவன் தம்மைக்) கோபிக் கினும், வாய்வெரீஇ-(அவனுக்கு) அஞ்சி, பேரா -(அவனைவிட்டு) அகலார்.

(வி - ம்.) யானை தன்னியல்பிலிருக்கும்போது அத னைத் தம்வசப்படுத்தி நடத்தும் பாகர். அது மதங்கொண்டு

தம் வசம் அடங்காமல் ஓடும்போதும் அதனை விடாது சென்று அதனை அங்குசம் இட்டு இடித்து அதன் மதத்தை அடக்கி மறுபடியும் அதனைத் தன்னியல்பிற்குக் கொண்டுவருவதுபோல், அரசன் தன்னியல்பில் நின்றபோது அவன் மனம்போல் நடக்கும் அமைச்சர் அவன் வெகுண்டு தன்னிலை தவறுங்கால் அவன் செவிகளில் நன்மொழிகளை இடித்துரைத்து அவனுக்கு அறிவு புகட்டி அவனை மறுபடியும் தன்னியல்பிற்குக் கொணர்வர் என்று அழகாக உவமித்திருக்கின்றார் ஆசிரியர்.

"அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்." (திருக்குறள்)

"கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்க ளாலவன் மெல்லென மெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததோர் யானை."
(கம்பராமாயணம்)

கவிழ்மதம் - பொழியும் மதம். மூட்டி: பிறவினை வினையெச்சம். மூட்டு: பிறவினைப் பகுதி, உகரக் கேடு: சந்தி, இ: விகுதி, பேரா: அமைச்சு என்ற அஃறிணைப் பெயர்க்கேற்ற பயனில்லை, வயத்ததென்பதும் அத்தகையது.

(க - ரை.) பாகனுனவன் யானை மதங்கொண்டபோது அதனை நடத்தி நல்வழிக்குக் கொண்டு வருவதுபோல், அமைச்சர் அரசன் வெகுண்டபோது அவனை நல்வழிப்படுத்தி யொழுகுவர்.
(சரு)

### அரசனை அடுத்தொழுகுமாறு

கைவரும் வேந்தன் நமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க—ஒவ்வொருகால்
எண்மைய னேனும் அரியன் பெரிதம்மா
கண்ணிலன் உள்வெயர்ப்பி னான்.

(பொ - ள்.) வேந்தன் - அரசன், நமக்கு கைவரும் என்று - நமக்கு இசைந்து வருவன் என்று கருதி, காதலித்த - விரும்பினவற்றை, செவ்வி தெரியாது - (அவனிடம் சொல்லக்கூடிய) காலந் தெரியாமல், உரையற்க - சொல்லுதலொழிக, ஒவ்வொரு கால் எண்மையனேனும் - சிற்சில நேரங்களில் (அவன் காணுதற்கு) எளியனுனாலும், பெரிது - பெரும்பாலும், அரியன் - (காண்டற்கும் பேசுதற்கும்) அரியனுவன், (மேலும்) கண் இலன் -

(அவன்) கண்ணோட்டமில்லாதவன், உள் வெயர்ப்பினன் - உள்ளத்தே சினமுமுடையவன்.

(வி - ம்.) கோல்நிலை கோடா வேந்தன் கோல் நிலை கோடா நிற்க, உறவினர் அயலார் என நோக்காது அறநெறி நின்று அந்நெறி பிறழ்ந்தாரைத் தண்டித்தலும், காலம் வருமளவும் பகைவரறியாமல் உள்ளே சினங்கொள்ளலும் இயல் பாதலால் கண் இலன், உள் வெயர்ப்பினன் என்றார். கண், இடத்தினிகழ் பொருண்மேல் நிற்றலானும், உள், அங்கிருக்கும் மனத்தின்மேல் நிற்றலானும் இடவாகு பெயர்கள். அரசனைக் கண்டு தத்தம் குறைபாடுகளைக் கூறப், பற்பல அதிகாரிகளும், புலவர்களும், குடிகளும் அயல்நாட்டு மன்னரின் தூதுவர் முதலியோரும் நேரம் பார்த்து நிற்பர். அரசன் எல்லோரையும் உசாவி அவரவர்க்கு மறுமொழி சொல்வதில் எப்போதும் ஆவலுடையவனுயிருப்பன். மேலும், அவரவர்க்கு ஏற்ற வகையில் அவரவர் குறைகள் நீக்க நெடுநேரம் ஆழ்ந்து கருதவேண்டியவனுயுமிருப்பன். அவ்வமயங்களில் அவன் மனநிலை தெரியாமல் எவ்வளவு உயிர்த் தோழராயிருந்தாலுங் காலமறியாமல் அவனிடம் ஏதாவது மொழிந்தால்அவன் சிந்தனை சிதறுண்டு, அதனாலவன் சீற்றங் கொள்வன். ஆதலின், செவ்வியறிந் துரைக்க வென்பது.

(க - து.) அரசன் நம்மிடம் அன்புடையவனு யிருப்பினும் அவனிடம் காலமறிந்தே நாம் விரும்பியவற்றைச் சொல்ல வேண்டும். (சகூ)

அரசன் வெகுளி

பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை உண்டே இறைமாண்டார்க்கு ஏதிலரும்
ஆர்வலரும் இல்லை அவர்க்கு.

(பொ - ள்.) வெகுளின்மன் - (அரசர்) மிகுதியாகக் கோபித்தால், பழமை (இவர் நமக்கு அரசியலில்) தொன்றுதொட்டுப் பணியாற்றி வருபவர் என்பதையும், கடைப்பிடியார் - நிலைநிறுத்தார், கேண்மையும் - (இவர் நமக்கு) நண்பர் என்பதையும், பாரார் - கவனியார், பிறிது - (அவை) ஒழிய, கிழமை - (இவர் நமக்கு) உரியவர் என்பதையும், ஒன்றும் - சிறிதும், கொள்ளார் - நினையார், (ஆதலால்) இறை - அரசியலில், மாண்டார்க்கு - அகப்பட்டார்க்கு, காதன்மை உண்டே - அன்புடைமையுண்டோ ?, அவர்க்கு - அவ்வரசர்க்கு, ஏதிலரும் - (இவர்) அயலாரெனவும், ஆர்வலரும் - (இவர்) அன்புடையரெனவும், இல்லை - கிடையா.

(வி - ம்.) அரசர் சினங்கொள்வாராயின், அயலாரெனவும் அன்புடையாரெனவும் பாரார் என்பதற்குச் சோழ மன்னன் ஒரு பசுவினது கன்றின்பொருட்டுத் தன் புதல்வன் செய்த குற்றத்திற்காக அவனையே கீழே கிடத்தி அவன்மேல் தேரூர்ந்த வரலாறு சான்றாகும். பழமை, கிழமை இரண்டும் பண்பாகு பெயர்கள். மன் : மிகுதியுணர்த்திற்று. ஆர்வம் - அன்பு; இதனையுடையார் ஆர்வலர்.

அரசர்க்குக் கோபம் பிறந்தால் அவர் கட்டளைக்கு எதிர்த்து நிற்றலியலாது. அரசர் கோபத்திற்கு உற்றார், உறவினர் என்பது கிடையாது. "வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை," "மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சநஞ் சுடைய நாகந் தன்னொடு கூடி வாழுந் தன்மை" என்பன காண்க.

(க - து.) எவரும் அரசரிடம் உரிமை கொள்ளல் இயலாது. (சஎ)

மன்னர் புறங்கடை காத்தல்

மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னெடுநாள்
காத்தவை எல்லாம் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்.

(பொ - ள்.) யாம் - நாம், மன்னர் புறங்கடை - அரசர் தலைவாயிலை, வறிதே காத்தும் - வீணாகக் காத்துவந்தும், எந்நலம் காண்டும் - யாது பயனடைந்தோம், என்று எள்ளற்க - என்று அக் காவலைக் கைவிடுதலொழிக; பல்நெடுநாள் - பல நாட்கள், காத்தவை யெல்லாம் - (தலைவாயிலைப் பொறுமையுடன்) காத்திருந்தவை யெல்லாம், - கடைமுறை போய் - முடிவிற் சென்று, கைகொடுத்து - உதவியாகி, வேந்து அவையின் - அரச சபையில், மிக்கு செயும் - மிகுந்த நன்மையைச் செய்யும்.

(வி - ம்.) வறிது : குறிப்பு வினையெச்சம். காண்டும் : தன்மைப் பன்மை இறந்தகால வினைமுற்று. வேந்து அவை - வேந்தவை : வேத்தவையாயது வலித்தல் விகாரம்.

அரச சேவை வீண்போகாது. அரண்மனை வாயில் காக்கும் காவலாளனை அரசன் வாயிற்புறத்து வந்து போகும் பல தடவைகளில் ஒரு தடவையாவது கவனியாம லிருக்கமாட்டான். பல தடவை கவனித்தும் அக் காவலாளிக்கு அன்பு காட்டா திருக்கலாம். அவனுக்கு வாயிற்காவலினும் உயர்ந்த தொழில் அளியா திருக்கலாம். அப்போது அரசன்பால் வெறுப்பும் தன் தொழி

வில் அருவருப்புங் கொள்ளலாகாது. ஏனெனில் அரசன் பல தடவையாக அக் காவலாளின் பொறுமை எப்படி என்று வெளிக்குக் காட்டாமலே கவனித்து வந்தாலும் வரலாம். அப்படிப் பல தடவை கவனித்ததில் காவலாளன் தன் வேலையைப் பொறுமையோடு பார்க்கிறான் என அவன் உறுதிகொண்டுவிட்டால், பின் அக் காவலாளனை அரசன் கட்டாயம் மேற்றொழில் ஒன்றில் அமர்த்துவான்; ஆகையால் "மன்னர் புறங்கடை காத்து வறிதே யாம் எந்நலங் காண்டும் என் றெள்ளற்க," "முயற்சி திருவினை யாக்கும்."

(க - து.) அயர்வின்றி அரசன் பணியாற்றுவார், முன் இல்லாவிடினும் முடிவில் அவன் அன்பு பெறுவர். (சஅ)

இறுவரைகாறும் முயலல்

உறுதி பயப்பக் கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப—இறும்உயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில.

(பொ - ள்.) இறும் உயிர்க்கும்-இறக்கும் நிலைமையில் இருக்கும் உயிர்களுக்கும், ஆயுள் மருந்து - வாழ்நாளைப் பெருகச் செய்யும் மருந்துகளை, ஒழுக்கல் - வாயில் விடுதல், தீதன்று - தீதாகாது; சில - சில காரியங்கள், அல்லன போல் ஆவனவும் உண்டு- முடியாதவைகள்போல் தோன்றி (விடாமுயற்சியின் பயனாய்ப்) பின்பு முடிவனவும் உண்டு; (ஆதலால்) உறுதி பயப்ப - நன்மை பயக்குங் காரியங்கள், கடைபோகா ஏனும் - முற்றுப் பெறாவிடினும், இறுவரை காறும் - (அவை) முடிவுபெறும் வரைக்கும், முயல்ப - (அறிஞர்) முயற்சிசெய்து வருவர்.

(வி - ம்.) உறுதி - அடையப்படுவது. பயப்ப: பலவின்பால் வினையாலணையும் பெயர். இறுவரை : வினைத்தொகை. முயல்ப : பலர்பால் எதிர்காலவினை முற்று. ப : விகுதி. காறு - வரை : சொல். ஒழுக்கல் : தொழிற்பெயர். ஆல் : அசை. ஆவனவும் - உம்மை இனி ஆகாமையும் என நிற்றலின் எதிர்மறையுமாம். "கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது, தூக்கங் கடிந்து செயல்" என்னுந் திருக்குறளும், "இசையா தெனினும் இயற்றியோர் ஆற்றால், அசையாது நிற்பதாம் ஆண்மை" என்னும் நாலடியாரும் இங்கே நினைவுகூரற்பாலன. உழைப்பில்லார்க்கு ஊதியமில்லை யாகையால் எக்கருமமாயினும் இறுதிவரை சலிப்பின்றி முயலல்வேண்டும்.

(க - து.) எக்கருமமாயினும் பயனளிக்காதென்று இடையில் விட்டுவிடாமல் அயர்வின்றி முடிவுவரை முயல வேண்டும். (சக)

முயற்சி செய்யாமை

முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா ஊழ்த்திறத்த என்ஞர்—மயலாயும்
ஊற்றமில் தூவிளக்கம் ஊழுண்மை காண்டுமென்று
ஏற்ருர் எறிகால் முகத்து.

(பொ - ள்.) ஊற்றம் இல் - அசைவின்றி நிற்குந்தன்மையில்லாத, தூ விளக்கம் - தூயவிளக்கை, ஊழ் உண்மை காண்டும் என்று - ஊழ்வினையின் உண்மையைத் தெரிவோம் என்று கருதி, எறி - வீசுகின்ற, கால்முகத்து - காற்றுக்கெதிரில், மயலாவும் - அறிவுகெட்டும், ஏற்ருர் - (ஒருவரும்) ஏற்றமாட்டார்: (அதுபோல் அறிவுடையார்) முயலாது வைத்து - பயன்தரும் காரியங்களைச் செய்யத் தாம்முயற்சி செய்யாமலேயிருந்து, ஊழ் திறத்த - ஊழ்வினை வகையில் வரும் நன்மைகள், முயற்று இன்மையாலே - தாம் முயற்சி செய்யாமையால், உயல் ஆகா - தப்பமாட்டா, என்ஞர் - என்று கருதிக்கொண்டு வாளா இரார்.

(வி - ம்.) முயற்சியால் ஊழையும் வெல்லலாமென இதற்கடுத்த செய்யுளில் ஆசிரியர் கூறுவர். ஊற்றம் - நிலையுடையதாய் நிற்குந் தன்மை. "ஊற்ற மிறு விளக்கம்" என்ற பாடங்கொண்டு, அசைவின்றி நிற்றலை ஒழிந்த விளக்கினை என்றுரைப்பாருமுளர். முகத்து : ஏழாம் வேற்றுமைக்கண் நின்றது.

(க - து.) எல்லாம் ஊழ்வினைப்படி ஆகும் என்று கருதி அறிஞர் வாளாவிருந்து முயற்சி செய்யாதிரார். (ருo)

முயற்சியால் விதியையும் வெல்லல்

உலையா முயற்சி களைகணு ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பால்முளை தின்று மறலி உயிர்குடித்த
கால்முளையே போலுங் கரி.

(பொ - ள்.) உலையா முயற்சி - இளைத்தலில்லாத முயற்சியையே, களைகண் ஆ - பற்றுக்கோடாகக் கொண்டு, ஊழின் வலி - போகு ஊழினது வலிமையை, சிந்தும் - சிதைக்கின்ற,

வன்மையும் உண்டே-வலிமையு முண்டு, உலகறிய - உலகமறிய, பால்முளை தின்று - ஊழ்வினையின் முளையைத் தின்று, மறலி உயிர் குடித்த - கூற்றுவனது உயிரையும் குடித்த, கால்முளையே- மார்க்கண்டன் என்னும் சிறுவனே, கரி - சான்றுவன்.

(வி - ம்.) உடையான் வினையை உடைமை மேலேற்றி உலையா முயற்சி எனவும், ஊழ்வினை எங்கிருப்பினும் விடாது தொடரும் என்பது தோன்ற, ஊழின்வலியெனவும், ஊழை வெல்லல் அருஞ்செயலாகையால் வன்மை எனவும், தின்றபின் நீர்குடித்த லியல்பாகையால் 'முளை தின்று உயிர் குடித்த' எனவும், மறலி உயிர் குடித்தது சிவபெருமானுயினும் அத்தொழிற் குக் காரணமாயிருந்தது மார்க்கண்டேயனுகையால், 'மறலி யுயிர் குடித்த கால்முளை' யெனவுங் கூறினர். கால்முளை - வழித் தோன்றுவோன். போலும் : அசை. உண்டே : ஏ, தேற்றம். 'கால் முளையே சாலுங் கரி' என்று பாடங்கொள்வாரு முளர். இச்செய்யுட்பொருள் 'ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித் தாழா துஞற்று பவர்,'' "கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற் றலின், ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'' என்னுந் திருக்குறள்களில் வந்திருத்தல் கண்டுகொள்க. ஊழை முளையாக உருவகஞ் செய்து உயிரை நீராக உருவகஞ் செய்யாமையின் இஃது ஏகதேச வுருவகவணி.

(க - து.) இளைத்தலில்லா முயற்சியால் ஊழையும் வெல்ல லாம். (ருக)

தெரிந்து முயலுதல்

காலம் அறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து—மேலும்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து
ஆள்வினை ஆளப் படும்.

(பொ - ள்.) காலம் அறிந்து - (ஒரு காரியத்தைச் செய்தற் குரிய) காலத்தினை அறிந்து, இடம் அறிந்து - அக்காரியத்தைச் செய்துமுடித்தற்கேற்ற இடத்தினையும் அறிந்து, செய் வினையின் மூலம் அறிந்து - செய்யும் அக்காரியத்தின் காரணத்தையும் அறிந்து, விளைவு அறிந்து - அதைச் செய்து முடித்தபின் அதனு லேற்படும் பயனையும் அறிந்து, மேலும் - பின்னும், சூழ்வன தாம் சூழ்ந்து - ஆராயவேண்டியவற்றை ஆராய்ந்து, துணைமை வலி தெரிந்து - (அக்காரியம் செய்து முடித்தற்குத்) துணைசெய்ய இருப்போர் வலிமையுந் தெரிந்துகொண்டு, ஆள்வினை - முயற் சி ஆளப்படும் - (பின்னர்ச்) செய்யப்படும்.

(வி - ம்.) மக்கள் யாவர்க்கும் இந்நீதி பொருந்துமேனும் போர்த்தொழில் புரியும் புரவலர்க்கு முதன்மையானதாகும். காலமறிதல் - தமக்கும் பகைவர்க்கும் ஆகுங் காலம், ஆகாத காலம் இரண்டையும் அறிதல். தமக்கு ஆகுங்காலம் - படைச் செலவுக்குப் போதிய பொருள் இருக்குங்காலம் முதலியன. இட மறிதல் - தமக்கும் பகைவர்க்கும் வெல்லுதற்குத்தக்க இடமும், தகாத இடமும் அறிதல். வினையின் மூலம் அறிதலாவது, போர் செய்யப் புறப்படும் காரணம் நன்றோ தீதோ என்று அறிதல்; வினைவு, அதன் பயனையெல்லாம் அறிதல். மேலும் சூழ்வன சூழ்தலாவது - போர் செய்யுங்கால் நிகழுமென நினைக்கும் இடுக் கண்களையும், அவ் விடுக்கண்களைக் களையும் வழிகளையும் ஆராய்தல். துணையறிதல் - துணையரசர்கள் தன்மையையும், தொழிலுக்கு வேண்டிய காரணங்களாகிய தேர்,யானை, குதிரை, காலாட்படை இவற்றின் வலிமையையும் படைத்தலைவர் முதலி யோர் திறமையையும், படைக்கு வேண்டிய உணவுப் பொருள் களின் நிலைமையையும் அறிதல். "இடத்தொடு பொழுது நாடிச் செய்வினைக் கண்ணு மஞ்சார்" என்னுஞ் சிந்தாமணியும், "பகல் வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும்பொழுது" என்னுந் திருக்குறளும் நினைவுகூரற்பாலன. ஆங்கு, தாம் என்பன அசை.

(க - து.) கருதிய தொழிலை முடிக்கக் காலம் இடம் துணை முதலியன இன்றியமையாதன. (ருஉ)

கருமங் கண்ணுயினர் செயல்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னர்.

(பொ - ள்.) கருமமே கண்ணுயினர் - (தாம் தொடங்கிய) காரியத்தை முடிப்பதிலேயே கருத்துக்கொண்டவர், மெய் வருத் தம் பாரார் - (தம்) உடம்பின் வருத்தத்தைக் கவனியார், பசி நோக்கார் - பசியையும் கவனியார், கண் துஞ்சார் - உறங்கார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - யார் தீங்கு செய்தாலும் அதைப் பொருட் படுத்தார், செவ்வி - காலத்தின், அருமையும் பாரார் - அருமையையும் நோக்கார், அவமதிப்புங் கொள்ளார் - (பிறர் செய்யும்) அவமதிப்பையும் கருதார்.

(வி - ம்.) கண் துஞ்சார் : உயர்திணையொடு சார்ந்த அஃறி ணைப் பெயர் உயர்திணை முடிபேற்று ஒரு சொன்னீர்மைத்தாய்

நின்றது. எவ்வெவர் - எவர் எவர்: பன்மைப் பொருள்களில் வந்த அடுக்குத்தொடர். ஏ: பிரிநிலை. துருவன், இருண்ட காட்டில் வெயில், பனி, மழை முதலியவற்றால் உடலுக்கு ஏற்பட்ட மெய்வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும் கண், துஞ்சாமலும், கொடியகாட்டு விலங்குகளின் தீமையை மேற்கொள்ளாமலும் தன் கருமமே கண்ணாகித் திருமாலினிடம் பதவி பெற்ற வரலாறு இதற்குச் சான்றாகும்.

(க - து.) ஒரு தொழிலைச் செய்து முடிக்க முன்னிற்போர் தமக்கு வரும் எவ்வகை இடையூறுகளையும் பொருட்படுத்தார்.

(௫௩)

சிறுபகை ஓம்பல்

சிறிய பகைஎனினும் ஓம்புதல் தேற்றார்
பேரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்து
ஆழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

(பொ - ள்.) பகை சிறிய எனினும்-தம் பகைகள் சிறியனவாயிருப்பினும், ஓம்புதல் - (அவற்றினின்றுந் தம்மைக்) காத்துக் கொள்ளுதலை, தேற்றார் - உணராதவர், பெரிதும் பிழைபாடு உடையர் - மிகவும் பிழையுடையராவர்; ஆழ்கயத்து-ஆழமான கயமாகிய, நீர்நிறை மடுவில் - நீர்நிறைந்த மடுவின்கண், தவளை குதிப்பினும் - தவளை குதித்தாலும், யானை நிழல் - (அம்மடுவில் அவ்வமயம் காணாநின்ற) யானையின் நிழலையும், காண்பு அரிது - காணுதல் அரிதாகிவிடும்.

(வி - ம்.) நீர்நிலையோரத்தில் ஒரு யானை நிற்க, அதன் நிழல் நீரில் காணப்படுகின்றது. அவ்வமயம் ஒரு சிறு தவளை தண்ணீரில் குதிக்கின்றது. குதித்தவுடன் நீர் கலங்கி யானையின் நிழல் சிதைவுறுகின்றது. தவளையோ யானையினும் எவ்வளவோ சிறியது. அது குதித்தலால் நீர்நிலை முற்றுங் கவர்ந்து, காணப்பட்ட யானையின் நிழல் சிதைவுறுவதுபோற், சிறிய பகைவராயிருந்தாலும் அவராலும் கேடுண்டு என்பது கொள்ளப்படும். எடுத்துக் காட்டுவமையணி.

"பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா, அஞ்சித்தற் காக்க வேண்டும் அரும்பொரு ளாக." "இளைதாக முள்மரங் கொல்க களையுநர், கைகொல்லும் காழ்த்த இடத்து" என்பன காண்க. "சிறு பாம்பெனினும் பெருந்தடி கொண்டடி" என்பது பழமொழி. பூ நாகம் சிறிது; அதன் விடமோ

உயிரையே வாங்கிவிடும். ஒரு சிறுவன் ஒருவரைப்பற்றி ஓர் அவதூறு சொல்வனுயின் உலகம் கேள்விப் பேச்சில் நம்புவதாயிருப்பதனுல் அவ் வவதூறு அப்படியே பலபேரிடைப் பரவி அவர்க்குப் பகைவர் பலரை உண்டாக்கும். ஆகையால், பகை சிறிதெனினும் விட்டிடல் வேண்டா வென்பது.

(க - து.) தம் பகைவர் சிறியவராயினும் அவரைப் பொருள் செய்யா தொழுகுத லாகாது. (௫௪)

### உட்பகை அச்சம்

புறப்பகை கோடியின் மிக்குறினும் அஞ்சார்
அகப்பகை ஒன்றஞ்சிக் காப்ப—அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

(பொ - ள்.) உலகு அனைத்தும் - உலகம் முழுமையும், சொல் ஒன்றின் - (தமது) ஒரு வார்த்தையினுலே, யாப்பார் - வயப்படுத்தக்கூடிய முனிவர், பல்காலும் - பன்முறையும், காமப் பகை - காமமாகிய உட்பகையை, பரிந்து ஓம்பி - மிகுதியும் வருந்தி, காப்ப - காவல் செய்வார் (அதுபோல் அறிவுடையார்), புறப்பகை - வெளிப்பகை, கோடியின் மிக்குறினும் - கோடிக்கு மேல் அதிகமாய் இருந்தாலும், அஞ்சார் - (அதற்காக) அஞ்சாமல், அகப்பகை - உட்பகை, ஒன்று - ஒன்றேயானுலும், அஞ்சிக் காப்ப - (அதன் துன்பம் பெரிதாகையால்) அதனை அஞ்சிக் காவல் செய்வர்.

(வி - ம்.) பகை : பகையுடையார்மேல் நிற்றலின் தொழிலாகு பெயர். அஞ்சார் : முற்றெச்சம். "வாள்போற் பகைவரை அஞ்சற்க அஞ்சுக, கேள்போற் பகைவர் தொடர்பு," "எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும், உட்பகை யுள்ளதாங் கேடு" என்பன திருவள்ளுவர் திருமொழிகள்.

(க - து.) புறப்பகைவரை விட அகப்பகைவர்க்கு அஞ்சுதல் வேண்டும். (௫௫)

### கூடா நட்பு

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணேட்டம் செய்யார் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

(பொ - ள்.) புண்-புண்ணை, கருவியிட்டு ஆற்றுவார் - கருவியினால் அறுத்து அதனைக் குணப்படுத்துவார்கள்; (அவ்வாறின்றி) பொதிந்து மூடார் - அதனை மறைத்து மூடிவையார்; (அதுபோல்) புறம் நட்டு - வெளிக்கு உறவுகாட்டி, அகம் வேர்ப்பார்-உள்ளே கோபிப்பவரது, நச்சுப் பகைமை-நஞ்சுபோலுங் கொடிய பகைமையை, வெளியிட்டு-வெளியாக்கி, வேறு ஆதல் வேண்டும்-நீங்கல் வேண்டும்; கழிபெருங் கண்ணோட்டம் - (அத்தகைய வஞ்சகமான பகைவர்பால்) மிகுந்த அன்பு, செய்யார் - செய்ய மாட்டார்.

(வி - ம்.) கருவியினால் அறுத்துக் குணப்படுத்த வேண்டிய புண்ணை மூடிவைத்தால், அஃது உள்ளே புடைத்துக் கெடுதி விளைத்தல் போல, உட்பகையும் வெளியுறவும் உடையவரால் தப்பாமற் கேடுவருமாதலின், அன்னாரின் நச்சுப் பகைமையை 'வெளியிட்டு வேறுதல் வேண்டும்' என்றார். ''முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா, வஞ்சரை யஞ்சப் படும்'' என்பது திருக்குறள். கழிபெரும்: ஒருபொருட் பன்மொழி: அகம்வேர்ப்பார்: ஒரு சொன்னீர்மைத்தாய் உயர்திணையின் முடிபேற்றது. செய்யேல்: முன்னிலை ஒருமை ஏவல் எதிர்மறை வினைமுற்று. நஞ்சு - நச்சு: வலித்தது. கண்ணோட்டமாவது தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. அஃதாவது, அவர்கள் சென்ற வழியே செல்வது.

(க - து.) வெளிக்கு உறவுகாட்டி உட்பகைமை கொண்டாரிடம் பழமை காட்டல் தகாது. (ருசு)

## தீ நட்பு

நட்பிடைக் குய்யம்வைத்து எய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்—திட்பமாம்
நாளுலந்த தன்றே நடுவன் நடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

(பொ - ள்.) நட்பு இடை - நண்பரிடத்து, குய்யம் வைத்து - வஞ்சகம் செய்தலைக் கொண்டு, எய்யா - அவர் அறியாமல், வினை சூழ்ந்து - (அவர்க்குத்) தீங்கு செய்யக் காலம் பார்த்து, வட்கார் திறத்தராய் - (அவர்கட்கு உள்ள) பகைவரோடு சேர்ந்து கொண்டு, நின்றார்க்கு-நிற்பவருக்கு, திட்பம் ஆம்-வலிய, நாள்-ஆயுட்காலம், உலந்தது அன்று-முடிந்ததில்லை, நடுவன்-இயமன், நடுவின்மை - (அத்தகைய வஞ்சகரின்) நடுவு நிலைமையில்லாத தீச் செயல்களை, மறந்து - தான் நடுவு நிலைமையுடையவனாகையால் நினையாமல், வாளாகிடப்பன் - சும்மா இருப்பன்.

(வி - ம்.) இயமன் நடுநிலையுடையோனுதலால் நடுவன் எனக் கூறினர்; தன்னிலைபோற் கருதிப் பிறரையும் எண்ணுவனுகையால் 'நடுவின்மை வாளா கிடப்பன் மறந்து' என்று கூறினர்.

(க - து.) நண்பர்போல் நடித்து வஞ்சகம் செய்வார் இயமன் நினைவிற்கு அகப்படுமட்டும் உயிரோடிருப்பர். (ருஎ)

மனநலத்துக்கான செயல்

மனத்த கறுப்பெனின் நல்ல செயினும்
அனைத்தேவையுந் தீயவே யாகும்—எனைத்துணையுந்
தீயவே செய்யினும் நல்லவாக் காண்பவே
மாசில் மனத்தி னவர்.

(பொ - ள்.) கறுப்பு மனத்த எனின் நல்ல செயினும் - ஒருவர் சினங்கொண்டாரெனின் ஒருவன் அவருக்கு நல்லவற்றையே செய்தாலும், அனைத்து எவையும் - (அவருக்கு) அவை யாவும், தியவே ஆகும் - திச்செயல்களாகவே ஒழியும், மாசு இல் மனத்தினவர் - களங்கமில்லாத மனமுடையவர்க்கு, எனைத் துணையும்-எவ்வளவுதாம், தியவே செய்யினும்-தீச்செயல்களையே செய்தாலும், நல்லவாக் காண்பவே - அவை யெல்லாவற்றையும் அவர்கள் நற்செயலாகவே கொள்வார்கள்.

(வி - ம்.) கறுப்பு மனத்த எனின் என்பதற்கு, சினக் குறிப்புக்கள் உள்ளத்திலுள்ளன எனின் என்றுரைத்துக் கொள்க. கறுப்பு - கோபமாகிய குறிப்புணர்த்துஞ் சொல்; "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப்பியம். கறுப்பு - கறை. மாசு - வெகுளி, பொறாமை, அவா முதலிய.

"வாரம் பட்டுழித் தியவும் நல்லவாம்
திரக் காய்ந்துழி நல்லவுந் தியவாம்
ஒரும் வையத் தியற்கை யன்றே"

என்னுஞ் சிந்தாமணிச் செய்யுள் இங்கு நினைவுகூர்தற்குரியது.

ஒருவர் மனம் எப்படியோ அதன்படியே அவர் எண்ணமுமிருக்கு மாகையால், இச்செய்யுளில் மனத்தாலான பயன் கூறப்பட்டது. நன்மனமுடையோர் யார் என்ன செய்தாலும் அவர்கள் அதில் குற்றங் காணுது குணமே காண்பர்; திய மனத்தினர் நல்ல செயினும் நன்றெென உணரார்.

(க - து.) கோபங்கொண்ட மனமுடையவர்கள்பால் எத்தனை நல்ல காரியஞ் செய்தாலும் அவர்களை மகிழ்வித்தல் அரிது. (ருஅ)

### இனியவர் வன்சொல்லும் இனிதே

இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியும் மொழியும் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்.

(பொ - ள்.) அனல் கொளுந்தும்-தீப்போலச் சுடும், வெங்காரம் - வெங்காரமானது, வெய்தெனினும் - வெம்மை கொடுப்பதாய்க் காணப்படினும், நோய் தீர்க்கும் - நோயினை நீக்கி உடல் நலம் என்னுங் குளிர்ச்சியைத் தரும், சிங்கி - நஞ்சானது, மெய் பொடிப்ப - உடல் புளகம் கொள்ளும்படியாக, குளிர்ந்தும் கொலும் - குளிர்ச்சியைக் கொடுத்தாலும் பின்னர்க் கொன்று விடும், (அதுபோலே) இனியவர் - நல்லோர், என் சொலினும் - என்ன சொன்னபோதிலும் (அஃதாவது, கேட்பவர்க்கு விருப்பமில்லாத சொற்களைச் சொன்னபோதிலும்,) இன் சொல்லே - அவை யாவும் (பின்நன்மையே விளைக்குமாதலால்) இனிய சொற்களேயாகும், இன்னார் - தீயவருடைய, கனியும் மொழியும் - கனிந்து தோன்றுஞ் சொல்லும், கடுவே - (பின் தீமையே விளைக்குமாதலால்) நஞ்சேயாகும்.

(வி - ம்.) சொல்லியல்பைக் கருதாது அவற்றின் பயன் ஆராய்தல் இன்றியமையாதது என்பது வாக்கினாலாய பயன் இங்குக் கூறப்பட்டது. வெங்காரம் - உப்புவகை. இச் செய்யுள் எடுத்துக் காட்டுவமை யணி.

(க - து.) நல்லோர் வன்சொல்லும் இன்சொல்லே; அல்லார் இன்சொல்லும் வன்சொல்லே. (ஙகூ)

### நல்லாறு

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து—மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமாசு அகற்றும்
நலமன்றே நல்லாறு எனல்.

(பொ - ள்.) பொய் - பொய்யும், குறளை-புறங்கூறலும்; வன் சொல் - கடுஞ்சொலும், பயனில - பயனில்சொல் கூறலும், என்ற - என்றுள்ள, இந்நான்கும் - இந்த நான்கு பாவங்களும், எய்தாமை - வராமல், சொல்லின் வழு காத்து - சொல்லின் குற றங்களை நீக்கி, மெய்யில் புலமைந்துங் காத்து-ஐம்புலன்களையும்

உடம்பின்கண் அடக்கியாண்டு, மனம் மாசு அகற்றும் - மனக் குற்றங்களை நீக்கும், நலம் அன்றே - நற்செயலன்றோ, நல் ஆறு - நன்னெறி, எனல் - என்று சொல்லத்தகும் ?

(வி - ம்.) மனமாசகற்றல் - மனக்குற்ற மொழிதல். மனக் குற்றங்கள்: காமம் வெகுளி மயக்கம்.

"சொல்லில் பொய், குறளை, வன்சொல், பயனில என்றிந் நான்கும் எய்தாமை"—வாக்குக் குற்ற மொழித்தல் ; குறளை யாவது, ஒருவர் இல்லாத இடத்தில் அவரைப்பற்றி இகழ்ச்சி யாய்க் கூறுதலும். உறவினுல் அறிந்த மறைகளை நண்பன்மேல் வெறுப்பு வந்ததனுல் வெளியிடுவதுமாகும். புலனைந்துங் காத் தல்-காயக்குற்ற மொழித்தல். எனல்: வியங்கோள் வினைமுற்று.

(க - து.) மனம், வாக்குக் காயங்களில் குற்றமில்லா தொழுகுதலே உயிர்க்குறுதி பயக்கும் நன்னெறியாகும். (சுo)

### நல்லார் அல்லன செய்யார்

நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்கு ஒருப்படார்—பல்பொறிய
செங்கண் புலிஏறு அறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கண் புனத்தபைங் கூழ்.

(பொ - ள்.) பல் பொறிய - பல புள்ளிகளையுடைய, செம் கண் புலி ஏறு - சிவந்த கண்களையுடைய புலியேறானது, அறப் பசித்தும் - மிகுந்த பசி கொண்டும், பைங்கண் புனத்த-பசுமை யான இடமாகிய கொல்லைகளிலுள்ள, பைங்கூழ் - பசிய பயிர் களை, தின்னு ஆம் - தின்ன மாட்டா (அதுபோல்), நல் ஆறு ஒழுக்கின் தலை நின்றார் - நன்னெறியொழுகுதலின் உறுதியாக நின்றவர்கள், நல்கூர்ந்தும் - வறுமையுற்றும், அல்லன செய் தற்கு ஒருப்படார் - முறையல்லாதவற்றைச் செய்ய மனங் கொள்ளமாட்டார்.

(வி - ம்.) நல் ஆறு என்பது முன் செய்யுளிற் கூறப்பட்ட மனம், வாக்குக் காயங்களாலாகிய குற்றங்களில்லாத போக்கு. அல்லன - கொலை, பொய், வஞ்சனை முதலியவை. ஒருப்படார் : ஒருமைப்படார் என்பதன் விகாரம். புலி ஏறு - ஆண்புலி. ஏறு: சிறப்புமொழி.

(க - து.) நல்லொழுக்கமுடையோர் வறுமை வந்த காலத் தும் தீச்செயல்புரிய நினையார். (சுக)

முதன்மையாக ஓம்பவேண்டியவை

குலம்விற்றுக் கோள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கோள்ளுந் திருவும்—தவம்விற்றூங்கு
ஊனோம்பும் வாழ்வும் உரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்தல் தலை.

(பொ - ள்.) குலம் விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் - (ஒருவன்) தன் குலத்தை விற்றுத் தேடும்பொருளும், வாய்மை நலம் விற்றுக் கொள்ளும் திருவும்-உண்மை எனும் நற்பொருளை விற்று (அஃதாவது, பொய் புகன்று) பெறும் செல்வமும், தவம் விற்று ஊன் ஓம்பும் வாழ்வும் (தான்கொண்ட) விரதத்தை விற்றுத்தன் உடலைப்பாதுகாக்கும் வாழ்க்கையும், உரிமைவிற்று உண்பதூஉம் - தன் முன்னோர் வாக்களித்த உரிமைகளை விற்று உண்ணுதலும் (ஆகிய இவையாவும் தன்னை வந்தடையாமல்), தான் ஓம்பிக் காத்தல் - தான் விழிப்புடன் காத்துக்கொள்வது, தலை - (எல்லா வறங்களுள்ளும்) தலைமையான அறமாகும்.

(வி - ம்.) குலம்விற்றல் - பொருள்வேண்டிக் குலத்திற் குரிய ஒழுக்கம் பெருமை முதலியவைகளை விட்டு வேறோர் இழி குலப் பற்றுடைத்தாதல். வாய்மை நலம் விற்றல் - பொருள் வேண்டிப் பொய்புகலல், பொய்ச்சான்று கூறுதல். தவம் விற்றல் - பொருள் வேண்டிக் கூடாவொழுக்கம், தீமை, களவு முதலிய நற்றவத்திற்கேலாதன செய்தல். உரிமை விற்றல்-பொருள் வேண்டிப் பிறனுக் கடிமையாதல். வெறுக்கை - பொருளுடையார்க்கு எப்போதும் உயிரச்சமே யாதலால் அறிஞர் அதனை வெறுப்பர் எனுங் காரணம்பற்றிப் பொருளுக்கு வெறுக்கை என்பது பெயராயிற்று. ஊன்: காரியமாகிய உடம்பிற் காதலால் - ஆகுபெயர். தலை : பண்பாகு பெயர். ஆங்கு: அசை.

(க - து.) மிகுந்த பொருள் கிடைக்குமென்றெண்ணி ஒருவன் தன் குலம் வாய்மை தவம் உரிமை ஆகியவற்றைக் கைவிடல் தகாது. (சுஉ)

வஞ்சகர் செல்வம்

இடைதேரிந்து அச்சுறுத்து வஞ்சித்து எளியார்
உடைமைகோண்டு ஏமாப்பார் செல்வம்—மடநல்லார்
போம்மன் முலைபோல் பருத்திடினும் மற்றவர்
நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்.

(பொ - ள்.) இடைதெரிந்து - காலத்தின் வாய்ப்பறிந்து, அச்சுறுத்து - பயமுறுத்தி, வஞ்சித்து - ஏமாற்றி, எளியார்

உடமைகொண்டு - எளியவர்களுடைய பொருளைக் கவர்ந்து, ஏமாப்பார் - இறுமாப்புக்கொள்பவர்களுடைய, செல்வம்-செல்வமானது, மடம் நல்லார் பொம்மன் முலைபோற் பருத்திடினும் - பேதைமையுடைய பெண்களின் பூரித்த கொங்கைபோல் ஒரு கால் மிகுந்திட்டாலும், (அவை அதிவிரைவில்), அவர் நுண்ணிடைபோல் தேய்ந்துவிடும் - அப் பெண்களுடைய சிற்றிடைபோல் குறைந்துபோகும்.

(வி - ம்.) பருத்திடினும் என்னும் உம்மை எதிர்மறையாகலின் பெரும்பாலும் வளர்ச்சியின்மை கொள்ளப்படும். பருக்கப் பருக்க அதனைத் தாங்கும் இடை சிறுத்து வருதல்போல, வஞ்சித்துத் தேடுஞ் செல்வமும் ஒரோவொருகால் மேலே பெருக்கமடைவதுபோல் தோன்றினாலும் அதற்கு அடிப்படையா யிருக்கும் புண்ணியமாகிய திருவுடைமை தேய்ந்துவருமென்பது உவமையாற் பெறப்பட்டது. சூழ்ச்சியும் அச்சுறுத்தலுங் காரிய நிறைவேற்றத்திற்குரியவையென அவற்றை நலமுடையனவாகக் கொள்ளும் ஒரு சாராரை இச் செய்யுள் உரமாய் மறுத்தமை கண்டுகொள்க. விடும் : துணிவுப் பொருள் தந்தது.

(க - து.) ஒருவரை வஞ்சித்துத் தேடியபொருள், வளர்வது போல் தோன்றினாலும் அதிவிரைவில் அழிந்துவிடும். (கூரு)

### பெற்றதைவிட்டுப் பெறுததை விரும்பல்

பெற்ற சிறுகப் பெறுத பேரிதுள்ளும்
சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

(பொ - ள்.) வரவர வாய்மடுத்து-கிடைக்கக் கிடைக்கத் தன் வாயினுள் அடக்கி, வல் விராய் முற்றும் மாய - வலிய விறகுகள் முழுதும் எரிந்தழிய, எரிதழல் - எரிகின்ற தீயும், மாயாதிரா - அழியாது போவதில்லை, (அழிந்தே போகும் ; அதுபோல), பெற்ற - கிடைத்த பொருள், சிறுக - தமக்குச் சிறியவாகத் தோற்ற, பெறுத - கிடைக்காத பொருளை, பெரிதுள்ளும்-மிகுதியாக விரும்பிக் கருதும், சிற்றுயிர்க்கு-குறுகிய வாழ்நாளையுடைய உயிர்களுக்கு, ஆக்கம் அரிது-பொருள் வளர்ச்சியும் அதனாலான பிற நன்மைகளும் உண்டாதல் அரிதாகும்.

(வி - ம்.) 'போதுமென்ற மனமே பொன்செயு மருந்து' எனும் பழமொழி இங்கு நோக்கற்பாலது. பெற்ற, பெறுத :

இரண்டும் பெயர்கள். அருமை - ஈண்டு இன்மைப்பொருட்டு. விறகு போடப்போடத் தீயும் அவற்றைப் பற்றிக் கொழுந்து விட்டெரியும்; மேல், விறகில்லையேல் எரிந்த விறகில் தங்கிய தீ நிலைத்தலின்றிச் சிறிது நேரத்தில் அவிந்துபோகும்; மேலும் மேலும் விறகுக்கு ஆசைப்படும் தீ, விறகு கிடைக்காவிடில் கிடைத்த விறகை எரிக்கு மட்டிலேனும் நிலையாமல் உடனே அவிந்து போதலும் உண்டு. பேராசையுடையோர் இவ்விரு வகை நிலைக்கும் உரியர். அம்மா : வியப்பு.

(க - து.) பெற்ற பொருள் போதுமென மகிழ்ச்சிகொள்ளாது பேராசைகொண்டு பெரும்பொருள் விரும்புவோர், பெற்ற பொருளாலான பயனையும் இழப்பர். (௬௪)

அறத்தாற்றிற் பொருளீட்டல்

தத்தம் நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி—எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

(பொ - ள்.) தத்தம் நிலைக்கும் குடிமைக்கும் தப்பாமே - தத்தமக்குரிய நிலைமையிலும் குலவொழுக்கத்திலும் வழுவாது, ஒத்த கடப்பாட்டில் தாள் ஊன்றி-இயைந்த முறையில் முயற்சி செய்து, எய்த்தும் அறம்கடையில் செல்லார் - மறந்தும் பாவ நெறியில் செல்லாமல், பிறன் பொருளும்வெஃகார் - பிறனுடைய பொருளையும் விரும்பாதவருடைய, புறங்கடையதாகும் பொருள்-தலைவாயிலிடத்தே பொருள் தானே வந்து கைகூடும்.

(வி - ம்.) தகுதியை இழத்தலாகாதென்றற்கு 'நிலைமைக்குங் குடிமைக்குந் தப்பாமே' எனவும், உலகியலோடும் ஒத்து முயல்க வென்றற்கு 'ஒத்த கடப்பாட்டில்' எனவும், முயற்சியில் கருத்தூன்றுக வென்றற்கு 'ஊன்றி' எனவும், பிறன் பொருள் விரும்பில் தன் பொருளுங் கேடுறுமாதலின் 'பிறன் பொருளும் வெஃகார்' எனவுங் கூறினர். இவ்வாறு குலவொழுக்கங் குன்றாமலும் பிறன் பொருள்மேல் ஆசை வையாமலும் தம் முயற்சியால் பொருள் தேடுவார்க்கு அவர் அறநெறி கண்டு அகமகிழ்ச்சி கொள்ளும் அறக்கடவுள், அன்னார் புறங்கடையில் எளிதிற் பொருள் குவிப்பார் என நன்னெறியினின்று முயற்சியாற் பொருளீட்டும் பெருமையை ஆசிரியர் புகழ்ந்தனர். செல்லார், வெஃகார் : வினையாலணையும் பெயர்கள்; இவற்றில் எதிர்மறை ஆகார இடைநிலை புணர்ந்துகெட்டது. நிலையாவது, தம்மிடத்தே நிற்ற

லுடையனவாகிய பொருள், வலி, ஆண்மை, துணை முதலாயின. தாம் தாம் என்பது வேற்றுமைப் பொருளில் தத்தம் என்றாயிற்று.

(க - து.) தீய வழிகளிலல்லாது தமது நிலைமைக்கும் குடிமைக்கும் பொருந்திய நல்வழியிற் பொருள் தேடுவார்க்குப் பொருள் எளிதிற் கூடும். (சூஉ)

### செல்வத்தின் வகை

போதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
குலமகளே ஏனையோர் செல்வம்—கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்.

(பொ - ள்.) தலையாயார் - தலையாயாருடைய, செல்வம் - பொருள், போதுமகளே போல்வ - பொதுமகளிரைப்போல எல்லார்க்கும் பயன்படும், ஏனையோர் - இடையாயினரது, செல்வம் - பொருள், குலமகளே - குலமகளைப்போலத் தன்னை யுடையோர்க்கே பயன்படும், கடையாயார் - கடையாயினரது, செல்வம்-பொருள், கலனழிந்த கைம்மையார் பெண்மை நலம்போல் - மங்கலநாணிழந்த கைம்பெண்களின் நலம்போல, பயன் படுவது இல் - யார்க்கும் பயன்படுவதில்லை.

(வி - ம்.) தலைமக்கள் தம்மிடமுள்ள பொருளைத் தாம் நுகர்வதுபோற் பிறரும் நுகருமாறுசெய்ப, இடைப்பட்டோர் தம் பொருளைத் தாமே நுகர விரும்புவர்; கீழ்மக்கள் பொருள் அவர்க்கும் பயன்படாதாய் ஒழியும். இதனாற் பலர்க்கும் பயன்படும் செல்வமே தலைமக்கள் செல்வமெனக் கருதப்படுமென்க. போலும் என்றும் பாடமுண்டு.

(க - து.) செல்வர், பலர்க்கும் உதவியாயிருத்தற்குரியர். (சுக)

### ஈயாதார் செல்வம்

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல—கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான்.

(பொ - ள்.) வள்ளன்மை இல்லாதான் - ஈயும் குணமில்லாதானது, செல்வத்தின் - செல்வத்தைவிட, மற்றையோன் - ஈயுங்

குணமுடையவனுடைய, நல்குரவே - வறுமையே, நனிநல்ல-மிக வும் நல்லன: (ஏனெனில், அவ்வறியன் உயிர்களிடம்) அருள் இலன் (என்று) - கருணையில்லாதவன் என்றுதல், அன்பிலன் (என்று) - அன்பில்லாதவன் என்றுதல், கண்ணறையன் என்று- கண்ணோட்ட மில்லாதவன் என்றுதல், பலரால் - பலராலும், கொன்னே - வீணில், இகழப்படான் - பழிக்கப்படமாட்டான்.

(வி - ம்.) 'ஈயாத செல்வர் இருந்தென்ன போயென்ன' எனும் இழிவுமொழி இங்கு நோக்கற்பாலது. போலும்: அசை. கண் அறையன் - கண்ணோட்டம் அற்றவன். கொடை யில்லா தவன் இகழப்படுவான் என்பதனுற் கொடையாளி புகழப்படு வான் என உய்த்துணர வைப்பது மாறுபடு புகழ்நிலை யணி

(க - து.) ஈயாத செல்வர் உலகினராற் பழிக்கப்படுவர். (சுஎ)

இன்சொல்

ஈகை யரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓஓ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனுல் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றுவா இவரென்செய் வார்.

(பொ - ள்.) ஈகை அரிது எனினும் - தாம் ஒருவர்க்குக் கொடுத்தல் முடியாதெனினும், இன்சொலினும் - இனிய மொழி களைக் கூறுதலினும், நல்கூர்தல் - வறுமையடைதல், ஓஓ கொடிது கொடிது - ஐயோ மிகவுங் கொடுமை, தீவினைக் கம்மிய னுல் - பாவமாகிய கம்மாளனுல், நா கொன்று - பேசமுடியாதபடி நாவைச் சிதைத்து, வாய்ப்பூட்டு இடப்படின் - வாய்ப்பூட்டுப் போடப்பட்டால், இவர்-இவர்கள், ஆஆ-ஐயோ, என்செய்வார் - யாது செய்வார்கள்?

(வி - ம்.) இதுமுதல் மூன்று செய்யுள்கள் வாக்கினலான பயனை விளக்கும். ஓஓ, ஆஆ, அம்மா-இவை இரக்கப் பொருளன. தீவினை கம்மியனுக உருவகிக்கப்பட்டது, கம் - தொழில். கொடிது கொடிது: அடுக்கு மிகுதிமேலது. பாவம் வந்து வாயைப் பூட்டிவிட்டது; அதனல் அவர் வாய்திறந்து இனிய சொற் கூறுவதும் அரிதாயிற்று. எனப் புகழ்வதுபோல இகழ்ந் தனர் எனக்கொள்க.

(க - து.) ஒருவர்க்கு ஒன்று ஈயத் திறனில்லாது போயி னும், இன்சொல்லேனுஞ் சொல்லாதொழியின் அது பெருந் தீவினையாய் முடியும். (சுஅ)

### சொல்வன்மைப் பயன்

சொல்வன்மை உண்டேனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினும் அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

(பொ - ள்.) சொல் வன்மை உண்டெனின் - தன் சொல்லைக் கேட்கும் ஒருவன் அதன்படி நடப்பான் என்னும் தன் சொல்லின் திறனறிந்திருந்தால், கொன்னே விடுத்து ஒழிதல் - அவ்வாறான சொற்றிறனைப் பயன்படுத்தாது வீணாகக் கைவிட்டுவிடுதல், நல்வினை - நற்காரியங்களுக்கு, கோறலின் வேறல்ல - கேடு செய்தலினும் வேறாகா, வாக்கின் பயன் கொள்பவர் - சொல்வன்மையாற் பெறப்படும் பயனை யறிந்தோர், வல்லை - விரைவில், தம் ஆக்கம் கெடுவது உளது எனினும் - தமது பொருளெல்லாம் கெட்டொழியுமாயினும், அஞ்சுபவோ - அதற்காக அஞ்சுவரோ? (அஞ்சார்.)

(வி - ம்.) சொல்வன்மையாவது - பிறர்க்குந் தமக்கும் பயன்படும் வகையிலும் பிறர் மதிப்பளிக்கும் நிலையிலும் பேசும் ஆற்றல். தம் சொல்லாற் பயனுண்டென்று தம்மை நாடித் தம் சொல்லுக்குக் குறையிரக்கும் தம்மின் எளியார்க்கு அன்னார் நலங் கருதித் தம் சொல்வன்மையைப் பயன்படுத்தா தொழியினும் நல்வினை கோறலாய் முடியும். சொல்வன்மையுடைய ஒருவரிடம் ஓர் எளியன் போய் "நீவிர் ஒரு சொல் சொன்னால் பிறர் எனக்கு வேண்டும் உதவி செய்வர்" எனக் கூறி அவன் குறையிரக்கும்போது சொல்வன்மையுடையான் அது செய்ய மறுப்பானாகில் அவன் தீவினை யுறுதலும் உண்டென்க. "அறம் பெரிதறைதல், வாய்மை, கல்வி, தீமையில் திறம்பல், இன்மொழி இசைத்தல், வன்மொழி மறுத்தல்"* இவை வாக்கின் பயன்.

(க - து.) சொல்வன்மையாற் பெறப்படும் பயனை யறிந்தோர் அப்பயனடைவான் வேண்டிச் சொல்வன்மையாற் செய்யக்கூடிய நன்மைகளை விரைவிற் செய்து நலம்பெறுவர். (சுக)

### சிறுமுயற்சிப் பெரும்பயன்

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமேனில் தாழ்வரோ தாழார்—அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையில் தீர்ந்தொழுக லார்.

---

* ஞானமிர்தக் கட்டளை.

(பொ - ள்.) எண்மையவாயினும் அறன் அல்ல கைவிட்டு - செய்தற்கு எளியனவாயிருப்பினும் அறநெறிக்கொவ்வாத தீச் செயல்களைச் செய்யாதொழிந்து, அரிதெனினும் - செய்தற்கு அரியதா யிருந்தபோதிலும், ஒண்மையின் தீர்ந்து ஒழுகலார் - அறநெறியினின்றும் விலகியொழுகாது செய்து அதன்பயன் அடையும் அறிஞர், சிறு முயற்சிசெய்து - சிறிய முயற்சிசெய்து, உறுபயன் - அம் முயற்சியால் மிகுந்த பயனை, கொள்ளப் பெறும் எனில் - அடையக் கூடுமானால், தாழ்வரோ - அம் முயற்சியைச் செய்யப் பின் வாங்குவரோ ?, தாழார் - பின்வாங்கார்.

(வி - ம்.) சிறுமுயற்சி - சொல்வன்மையால் உண்டாகும் பயன் போன்றவை. அம் முயற்சி எளிதாதலால் சிறு முயற்சி என்றும், மனம் நல்வழிச்சென்று செய்யும் அறச்செய்கை யார்க்கும் அரிதாகையால் அதனை அரிதென்றுங் கூறினர். ஒண்மை - நன்மை. "அழகும் நன்றும் அறிவும் ஒண்மை" என்பது பிங்கலம். எண்மையவாயினும் என்பதற்கு, எளிதாகச் செய்து பெரும்பயன் பெறத்தக்கனவாய் வாய்க்குமாயினும் என்றுரைத்தலுமுண்டு. இச்செய்யுட் பொருளோடு "பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி, னருமையுடைய செயல்" "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர், செயற்கரிய செயகலா தார்" என்னுந் திருக்குறள் ஒப்பு நோக்குதற்குரியன.

(க - து.) செய்தற்கரிய அருஞ்செயல் செய்து பெரும் பயன் பெறும் அறிஞர். சிறு முயற்சியாற் பெரும்பயனடைய வழியிருப்புழி அம் முயற்சியை விரைந்து செய்து நலமுறப் பின்வாங்கார். (எ0)

### நாகரிகம் இல்லாதவர்

செயக்கடவ அல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிகம் என்னும்—செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோம் என்று தலைதுமிப்பான் தண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

(பொ - ள்.) செயக்கடவ அல்லனவும் செய்தும் மன் - செய்தற்கரிய செயல்களையும் மிகுதியுஞ் செய்து முடிப்போம், என்பார் - (என்று செயலிற் காட்டாது) சொல்லளவிற் சொல்லி நிற்பாரின், நயத்தகு நாகரிகம் என் ஆம் - முகமனான கண்ணோட்டம் என்ன பயனைத் தரும் ? (இச்செய்கை) செயிர்த்துரைப்பின் - ஒருவரைக் கோபித்துச் சொன்னால், நெஞ்சுநோம் என்று -

அவர்க்கு மன வருத்தம் உண்டாகுமென்று, தலை துமிப்பான் தண்ணளிபோல் - அவர் தலையை வெட்டும் கருணைத் திறனை ஒக்குமென்று, எஞ்சாது எடுத்துரைக்கற் பாற்று - அது கூசாமற் கூறுந் தன்மையதாகும்.

(வி - ம்.) நாகரிக மென்றது, ஈண்டுக் கண்ணோட்டம். தன்னலாகாதவிடத்துத் தன்னை வந்தடுத்தோன் பிறனிடம் சென்றேனும் பயன் பெறட்டும் என்று விடாது, தானே அருஞ் செயல்களைச் செய்துவிடுவதாய்ச் சொல்லி, அவன் பிறனொருவனிடம் அடையும் பயனையும் அடையவிடாது கெடுத்தலால், 'நெஞ்சு நோமென்று தலைதுமிப்பான் தண்ணளிபோல்' என்றார்.

மன் : மிகுதிமேற்று. தண்ணளி : அதன் எதிர்மறையை யுணர்த்த வந்த குறிப்புமொழி.

(க - து.) தன்னை வந்தடுத்துத் தன் உதவி விரும்புவானிடம், தான் செய்தற்கரிய காரியங்களையும் செய்து முடிக்க முடியுமென்று சொல்லளவிற் சொல்லிச் செயலில் அவ்வாறு செய்யாதொழிவது நாகரிகமாகாது. (எக)

## அடக்கம் இல்லாதார்

அல்லன செய்யினும் ஆகுலங் கூழாக்கொண்
டோல்லாதார் வாய்விட் டுலம்புப—வல்லார்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற் பார்.

(பொ - ள்.) ஒல்லாதார் - வன்மையில்லாதவர், அல்லன செய்யினும் - (பிறர்க்குப் பயன்படக்கூடிய செயல்கள்) அல்லாதவற்றைச் செய்தாலும், (தாம் பயன்படக்கூடிய செயல்களைச் செய்துவிட்டதுபோல்) ஆகுலம் கூழ் ஆ கொண்டு - ஆரவாரத்தையே பயனாகக் கொண்டு, வாய்விட்டு உலம்புப - பலரறியத் தஞ் செயல்களைக் கூறி முழங்குவர்; வல்லார் - வல்லமையுடையோர், பிறர் பிறர் செய்பபோல் செய்தக்க செய்து - தக்கார் பிறரால் செய்யப்படுவனபோலப் பயன்படுஞ் செயல்கள் செய்து, ஆங்கு - அவ்விடத்தில்; அறிமடம் - (தாம் செய்த பயன்படுஞ் செயல்களைத் தாம் நன்குணர்ந்தும் உணராததுபோல்) அறியாமையை, பூண்டு நிற்பார் - மேற்கொண்டு அடக்கமாயிருப்பார்.

(வி - ம்.) மனம், வாக்கு, காயங்களில் அடக்கமிலார் செய்யுங் காரியங்கள் மற்றவர்களுக்குப் பயன்படா வாகையால் 'அல்லன செய்யினும்' என்றார். அடுக்கு, பன்மைக்கண் வந்தது.

(க - து.) அருஞ்செயல்கள் செய்ய இயலாதவரே அடக்கமிலாது ஆரவாரமுடையராயிருப்பர். (எஉ)

பயன் கூறுவோர்

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கோள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கோடிறுடைத்துக் கோல்
கைவிதிர்த் தஞ்சப் படும். [வான்போற்

(பொ - ள்.) பகை யின்று-ஒரு பகையுமில்லாமல், பல்லார் பழியெடுத்தோதி - பலரிடத்திலுமுள்ள வசைகளை எடுத்துச் சொல்லி, நகை யொன்றே - இகழ்தலாகிய தீவினை ஒன்றையே, நன்பயனுக் கொள்வான் - நற்பயன் என்று கொண்டு திரியும் மூடன், பயமின்று - வேறொரு பயனுமின்றி, மெய்விதிர்ப்புக் காண்பான் - உடலிலேற்படும் நடுக்கமாகிய பயனொன்றையே காணக் கருதி, கொடிறு உடைத்துக் கொல்வான்போல் - பிறருடைய கன்னத்தை உடைத்து வருத்து மியல்புடையானைப் போல், கைவிதிர்த்து அஞ்சப்படும் - (பிறராற்) கை நடுக்கத்துடன் அஞ்சப்படுவான்.

(வி - ம்.) இன்று-ஈண்டு இன்றி என்னும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சத் திரிபு. கொள்வான், கொல்வான் இரண்டும் வினையாலணையும் பெயர்கள். கொடிறுடைத்துக் கொலை செய்வான் எய்துந் தீவினைப் பயனை இவனும் எய்துவன் என்பது.

(க - து.) பிறர்வசை கூறுதலையே தன் தொழிலாகக் கொண்டவரை யாவரும் அஞ்சி விலகுவர். (எங)

தெய்வத் தண்டனை

தெய்வ முளதேன்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதேன்பார்க் கில்லைத்தம் இன்புதல்வர்க் கன்றே
பலகாலும் சோல்வார் பயன்.

(பொ - ள்.) தெய்வம் உளது என்பார் - தெய்வம் உண்டு என்று சொல்வோர், தீய செயப்புகின் - தீய காரியங்களைச் செய்யத் தலைப்பட்டால், தெய்வமே கண் இன்று நின்று ஒறுக்கும் - அவர்கள் நம்பும் அத்தெய்வமே கண்ணோட்டமின்றி அவர் முன் நின்று அத்தீய காரியங்களுக்காக அவர்களைத் தண்டிக்கும் தெய்வம் இலது என்பார்க்கு இல்லை - தெய்வம் இல்லை என்று

சொல்வோர்க்கு அத்தெய்வம் அவ்வாறு தோன்றுவதுமில்லை, அவர்களைத் தண்டித்தலுமில்லை; (இஃது எதுபோலெனில்) தம் இன்புதல்வர்க்கு அன்றே - (பெற்றோர்) தம் அன்பார்ந்த புதல்வர்க்கன்றோ, பலகாலும் (அவர்கள் நன்னெறி தப்பிச்) செல்லுந்தோறும், பயன் சொல்வார் - பயன் தருஞ் சொற்களை (நீதிகளை)ச் சொல்வார்கள்? (அதுபோல வென்க).

(வி - ம்.) பெற்றோர் தம் அன்பான புதல்வர்க்கு மட்டும் அடுத்தடுத்து அறநெறி கற்பிப்பாரன்றி அன்பிலாப் புதல்வர்க்கு அவ்வாறு கற்பியாரானமைபோல், இறைவனும் தன்னை நம்பினவர்க்கு அவரை ஒறுத்தேனும் நன்னெறி காட்டுவனன்றி நம்பாதார்க்கு அவ்வாறு செய்வதில்லை என்க. தெய்வம் சொல்லாலஃறிணையாதலின் அதற்கேற்ற முடிபு கொடுத்தார். 'தம் இன்புதல்வர்க்கன்றே பலகாலும் சொல்வார் பயன்' என்னும் ஈற்றடியால் முன்னடிகளில் தொடங்கிய கருத்தை முடித்தலால், இது வேற்றுப் பொருள்வைப்பணி. ஒறுக்கும் : வினைமுற்று ; ஒறு : பகுதி.

(க - து.) இறைவனுண்டென்று நம்பினவர்களை அவ்விறைவன் ஒறுத்தேனுந் தீநெறியினின்றுந் தடுப்பன். (எசு)

### தீயன தீயனவே

தீய செயற்செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன ஆகாவாம் நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல்.

(பொ - ள்.) தீய செயல் செய்வார் ஆக்கம் பெருகினும் - தீய காரியங்களைச் செய்வோரின் பொருள் ஒருகால் பெருகி வளர்ந்தாலும், தீயன - தீய காரியங்களால் திரட்டிய அப்பொருள் எல்லாம், நா இன்புற நக்கிக் கொல்லும் கவயமாபோல் - நாவினால் இன்பமுற நக்கிப் பின்னால் கொல்லுகின்ற காட்டுப் பசுவைப் போல், தீயனவே வேறல்ல - தீமை பயப்பனவேயன்றி வேறாகா, (ஏனெனில்) தீயன - தீய காரியங்களால், நல்லன ஆகா - (என்றும்) நற்காரியங்களாகமாட்டா.

(வி - ம்.) காட்டுப்பசு தான் கொல்ல விரும்பும் ஓர் உயிரை நாவினால் இன்பந் தோன்ற நக்கிக்கொண்டே யிருந்து, அவ்வின்பத்தி லீடுபட்டு அவ்வுயிர் தன்னிலையில் அசையாமல் நிற்கையில் அது திடீரெனப் பாய்ந்து அதன் உயிரை வாங்கும், அதுபோல் தீநெறியில் திரட்டிய பொருள் முதலில் இன்பந் தருவ

தாய்த் தோன்றினும், இறுதியில் தீமையே பயக்கும் என்றார். இது கருதியே "தீயன தீயனவே, வேறல்ல" என்றும், "தீயன நல்லன வாகா" என்றுங் கூறினார்.

கவயமா - காட்டுப்பசு. தீத் தான்பற்றிய பொருளை முற்றும் எரித்தல்போலத் தீய வழியா லீட்டப்பட்ட பொருளும் தற் சேர்ந்தாரை முற்றும் அழித்தலால் தீயன எனப்படும்.

"இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து"

என்னுந் திருக்குறள் இங்கே கருதுதற்குரியது.

(க - து.) தீயகாரியங்களில் திரட்டிய பொருள் தீமை யையே செய்யும். (எகு)

பழி நாணுவோர்

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரின் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி உன்னிப் பழிநாணி உள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

(பொ - ள்.) தம் முன்னை ஊழ்வலி யுன்னி - முற்பிறப்பிற் செய்த தமது பழைய ஊழின் வலிமையை நினைந்து, பழி நாணி உள் உடைவார் - (வருகின்ற) பழிச் சொற்களுக்கு வெட்கி மனம் வருந்துவோர், சில தீய செயினும் (ஒரு காலத்தில் அறிவுமயங்கி யேனும் பிற காரணங்களாலேனும்) சில தீய காரியங்களைச் செய்தாராயினும், (அவர்கள்), நன் மக்கள் - மேன்மக்கள், செம் நா தழும்பு இருக்க - செவ்விய நாவினை (இடைவிடாமல் தம் நன்மையை எடுத்துரைத்தலால்) தழும்பேறியிருக்கும்படி, நாள் வாயும் செந்நெறி செல்வாரின் - நாள்தோறும் நல்லொழுக்க வழி களிலே செல்லும் மேலோரினும், கீழ் அல்லர் - கீழாகார்.

(வி - ம்.) தாம் அறியாமல் ஊழ்வினையால் மதிமயங்கித் தீய காரியங்கள் செய்ய நேர்ந்து அதனால் வரும் பழிக்கு நாணி மனம் வருந்துவோர், மேலுமேலுந் தீய காரியங்களைச் செய்யா ராதலின் அதனால் அவர் பெருமை குன்றுதலிலர். நாள்வாயும் : 'வாயும்' ஏழாம் வேற்றுமைக்கண் வந்து நாடோறு மென்னும் பொரு டந்து நின்றது. கீழ் : பண்பாகு பெயர் ; கீழோரை உணர்த் திற்று. உள் : இடவாகு பெயர் ; மனத்தை உணர்த்திற்று. நல் லோர் இடைவிடாது புகழ என்பார், 'நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க' என்றார். "பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்கு, உறைபதியென்னு முலகு" என்பது திருக்குறள். செந் நா-உண்மையாகிய செம்மையுடைய நா.

(க-து.) மேன்மக்கள் ஒரோவொருகால் ஊழ்வலியால் நல்லொழுக்கத்தினின்று தவறினும், அவர்கள் உள்ளுடைந்து வருந்துதலின் நன்மக்களேயாவர். (எசு)

பிறர்மனை நயத்தல்

பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறன்அன்றே ஆயினு மாக—சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கோள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

(பொ-ள்.) பிறன் வரை நின்றாள் - பிறன் வரம்பில் நிற்பவள் (அஃதாவது பிறன் மனைவி), கடைத்தலைச் சேறல் - தலைவாயிலினிடத்துச் செல்லல், அறன் அன்று - நற்செயலாகாது, ஆயினும் ஆக-(அவ்வாறு அறனாகாது) ஆயினுமாகுக, சிறுவரையும் - (அச்செயலில்) நொடிப்பொழுதாயினும், நல் நலத்தது ஆயின் - தூய இன்பமுடையதாயின், கொள்க - அதனைக் கைக்கொள்க; நலம் அன்றே-(அச்செயலால் வருவது) இன்பமன்றே, (ஆனால் வருவதென்னை யெனின்), மெய் நடுங்க - உடல் நடுங்க, உள் நடுங்கும் நோய் - மனமும் நடுங்குவதற்குக் காரணமாகிய வருத்தமேயாகும்.

(வி-ம்.) பிறன்மனை புகுவான் புகுங்கால் மெய்ந் நடுங்கி உள்ளொடுங்கிச் செல்வானாதலால் "மெய்ந்நடுங்க உண்ணடுங்கு நோய்" என்றார். "புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சம், துய்க்குமிடத் தச்சம் தோன்றாமற் காப்பச்சம்,"* "காணிற் குடிப்பழியாம் கையுறிற் கால்குறையும்,"† "பகைபாவம் அச்சம் பழியென நான்கும், இகவாவாம் இல்லிறப்பான் கண்"‡ என்பன இங்கு நினைவு கூரற்பாலன.

(க-து.) பிறன் மனையாளை விரும்பல் அறனன்று; இன்பமுமன்று: துன்பமே விளைக்கும். (எஎ)

நல்லின்பம்

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம்
இன்னலமுங் குன்றாமே ஏரிளங் கோம்பன்னார்
நன்னலந் துய்த்தல் நலம்.

---

* †நாலடியார், அங, அச. ‡திருக்குறள், கஙு: சு.

(பொ - ள்.) கருமம் சிதையாமே - தாம் செய்ய வேண்டிய காரியங்கள் தவறிப் போகாமலும், கல்வி கெடாமே - பின்னுங் கற்றுக் கொள்ளவேண்டிய கல்வி கெட்டுப்போகாமலும், தருமமும் தாழ்வுபடாமே - செய்யவேண்டிய அறச்செயல்களுக்குக் குறைவு வராமலும், பெரிதும் - மிகுதியாக, தம் இன் நலமுங் குன்றுமே-தம் இல்லற நன்மையுங் குறைவுபடாமலும், ஏர் இள கொம்பு அன்னார் - அழகிய இளங்கொம்பினை யொத்த மனைவியரின், நல் நலம் துய்த்தல் - நல்லின்பத்தை நுகர்தல், நலம் - யாவர்க்கும் நன்றாம்.

(வி - ம்.) கருமமாவது, பொருள் முயற்சி முதலியன. கல்வி - அறிஞர் எழுதிய அறிவுரைகள் கற்றலுங் கற்பித்தலும். தருமம் - தத்தம் நிலைக்குரிய வகையில் ஒழுகல். இல் நலம் - இல்லற வாழ்க்கைக்குரிய அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும், துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் முதலிய நற்செய்கைகள்.

முன் செய்யுளில் பிறனில் விழைவதாலேற்படும் துன்பங்களை விளக்கிப் போந்த ஆசிரியர், இச் செய்யுளில் தன் இல்லாளோடு ஒருவன் இன்ப நுகருங்கால் கவனிக்க வேண்டிய முறைகளை விளக்கினார்.

(க - து.) கடமைகட்குக் குறைவு நேராத முறையில் மனைவியோடு கூடி இன்பம் நுகர்தல் வேண்டும். (எஅ)

### காமிகள் செய்கை

கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமும் ஓம்பார்
களவொன்றோ ஏனையவுஞ் செய்வார்—பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்.

(பொ - ள்.) காமம் கதுவப்பட்டார் - காமத்தால் பற்றப் பட்டவர்கள், கொலை அஞ்சார் - கொலைபுரியப் பயப்படார், பொய் நாணார் - பொய் சொல்லக் கூசார், மானமும் ஓம்பார் - தம் பெருமையையும் பாதுகாவார், களவு ஒன்றோ - களவு செய்த லொன்றோ! (அதற்கு மேலும்) ஏனையவும் செய்வர் - மற்றுமுள்ள பலவகையான தீச்செயல்களும் செய்வார், இஃது - இக் காமம், பழியோடு பாவம் என்னார் - பழியோடு பாவமாம் என்றும் நினையார், (அங்ஙன மாயின் அவர்) பிறிது என்செய்யார் - வேறு யாதுதான் செய்யமாட்டார்? எல்லாத் தீச் செய்கைகளுஞ் செய்வர்.

(வி - ம்.) 'காமங் கதுவப் பட்டார்' காமம் என்பதற்கு அடிமையாயினார் என்பது பொருள். மற்று: அசைச்சொல். பொய்ந் நாணர் என்பது தனிக்குறிலை யடுத்து நின்ற யகர வீற்றின் முன் நகரம் மிகுந்தது. "குறல்வழி யத்தனி ஐந்நொது முன்மெலி மிகலுமாம்," என்பது விதி.

(க - து.) காமச்சிந்தை யுடையோர் எல்லாத் தீச்செயல் களுஞ் செய்வர். (எக)

தூர்த்தர் இயல்பு

திருவினு நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறுவிய
வாயின வேனும் உமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்.

(பொ - ள்.) நறுவிய - இனிய பொருள்கள், வாயின ஏனும் - (தமது) வாயிலகப்பட்டுள்ளன வாயினும், உமிழ்ந்து - (அவற்றைத்) துப்பிவிட்டு, கடு தின்னும் - கைப்புள்ள பொருள்களைத் தின்னும், தீய விலங்கின் - கொடிய விலங்குபோல், சிலர் - தீயோர் சிலர், மனைக்கிழத்தி - தம் மனைவி, திருவினும் நல்லாள் ஏனும் - திருமகளினுஞ் சிறந்த அழகுடையவளா யிருப்பினும் அவளை விடுத்து, பிறன் மனைக்கே - பிறர் மனைவியரின் தொடர்புக்கே, பீடு அழிந்து நிற்பர் - தம்முடைய பெருமை கெட்டு நிற்பர்.

(வி - ம்.) சில விலங்குகளென்றது, ஒட்டகம் முதலியவை. இவை உண்ணுதற்கு இனிய பொருள்கள் பல இருக்கினும் அவற்றை விடுத்து வேப்பிலைபோன்ற கசப்புடைய பொருள்களையே விரும்பும். அவ்வாறே மனிதருள்ளும் உரிமையின்பமுடைய மனைவி இருக்கையில் அவளை விரும்பாது அவ்வுரிமையின்ப மில்லா அயலான் மனைவியை விரும்புவோரும் சிலர் உளர். நறுவிய: 'நறுமை' என்னும் பண்படியாகப் பிறந்த பலவின்பால் படர்க்கைப் பெயர்; வாயின: குறிப்பு வினைமுற்று. கடு-கைப்பு; பொருள்மேல் நிற்றலால் ஆகுபெயர். விலங்கின் - இன்: ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருள். "ஆத்த மனையாளகத்தி லிருக்கவே, காத்த மனையாளைக் காமுறுங் காளையர், காய்த்த பலாவின் கனியுண்ண மாட்டாமல், ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே" என்பது திருமந்திரம்.

(க - து.) திருமகள்போலும் அழகுடைய தம் மனைவியை நீங்கிப்பிறன் மனைவிமேல் ஆவல்கொள்ளும் பேதையர், இனிய பொருள் தம் வாயிலிருந்துந் தின்னாது உமிழ்ந்து கைப்புள்ள பொருளைத் தின்னும் விலங்குகளுக்கு ஒப்பாவர். (அ0)

### மக்கட் பேறு

கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோ ராக்கமும் உண்டாயின் இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.

(பொ - ள்.) கற்பு உடுத்து - கற்பாகிய ஆடையை உடுத்து, அன்பு முடித்து - அன்பாகிய மலர் சூடி, மெய் - உடம்பில், நாண் பூசி - நாணமாகிய கலவைச் சாந்து பூசி, நற்குணம் நற்செய்கை பூண்டாள் கு - நற்குணம், நற்செய்கைகளாகிய அணிகலன்களை அணிந்த மனையாளுக்கு, மக்கள்பேறு என்பதோர் செல்வமும் உண்டாயின் - புதல்வரைப் பெறுதலான ஒப்பற்ற ஆக்கமும் உளதானால், கொண்டான் கு - (அவளை மனைவியாகக்) கொண்டவனுக்கு, செய்தவம் - (அவன்) செய்யவேண்டிய தவம், வேறு இல் - வேறு இல்லை.

(வி - ம்.) கற்பு, அன்பு, நாணம், நற்குண நற்செய்கையே ஆடை, மலர், கலவை, அணிகலன் எனக் கொள்ளப்பட்டன: அதற்கேற்ப உடுத்து, முடித்து, பூசி, பூண்டாள் என வினைகள் தந்தார். எனவே இஃது உருவகவணி. பேறு: பெறு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். கற்பு - கணவனுக்குப் பொய்யாமல் ஒழுகும் நல்லொழுக்கம். அன்பு - சுற்றத்தார் முதலியோரிடங்கொள்ளும் பரிவு. நாணம் - செய்யத்தகாதவற்றில் உள்ளத்திற்கு உண்டாவதோர் ஒடுக்கம். பூண்டாள்: வினையாலணையும் பெயர்.

(க - து.) கற்பு, அன்பு, நாணம், நற்குண நற்செய்கை மக்கட் பேறு முதலிய மேன்மைகளையுடைய மனையாளோடு வாழும் வாழ்க்கையே தவ வாழ்க்கையை ஒக்கும். (அக)

### மகளிர் மனம்

ஏந்தெழில் மிக்கான் இளையான் இசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை இன்சொல்லான் கேளேனினு மாதர்க்
கயலார்மேல் ஆகும் மனம்.

(பொ - ள்.) கேள்-(தன்) கணவன், ஏந்து எழில் மிக்கான் - சிறந்த அழகு மிகுந்தவனும், இளையான்-இளமைப் பருவமுடையவனும், இசைவல்லான்-இசைபாடுதலில் வன்மையுடையவனும், காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - பெண்களின் கண்களைக்

கவரும் பார்வையுடையவனும், வாய்ந்த - பொருத்தமான, நயன் உடை இன்சொல்லான் - மேன்மையான இனிய சொற்களை யுடையவனும், எனினும் - ஆயினும், மாதர்க்கு - (கற்பிலாத) மாதருக்கு, மனம் அயலார்மேல் ஆகும் - வேற்று மனிதர்மேல் மனஞ்செல்லும்.

(வி - ம்.) என்பதாவது செய்யுளில் ஆசிரியர் காமங் கதுவப் பட்டார் தம் மனைவியர் எவ்வளவு அழகுடையவராயிருப்பினும் பிறர் மனைவியர்மேல் ஆவல் கொண்டலைவர் என்பதற்கிணங்க, இச்செய்யுளில் கற்பிலா மங்கையர் தங் கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் வேற்றுமனிதர்மேல் விருப்பம் கொள்வர் என்றார். இவ்விரண்டாலும் ஆசிரியர் கற்பிலா ஆணையும் பெண்ணையும் எடுத்துக் கூறினரென்க.

மாதர் : இழிவினால் ஒருமையில் வந்த பன்மை. இசைக்கு எளிதில் மயங்குவர் மாதர் என்பது, "பாடினான் தேவகீதம் பண்ணினுக் காசான் பாடச், சூடக மகளிர் சேர்ந்து" என்னும் சிந்தாமணியினால் விளங்கும். இச் செய்யுளுடன் பின் வரும் இரண்டு செய்யுளையுஞ் சேர்த்து மூன்று செய்யுளில் ஆசிரியர் கற்பிலா மகளிர் தன்மை கூறுகின்றார்.

(க - து.) கற்பிலா மனைவியர் தங்கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் வேற்று மனிதர்மேல் விருப்பங் கொள்வர். (அஉ)

### கற்பில்லாத மகளிர்

கற்பில் மகளின் நலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தம்
கேள்வர்க்கும் ஏதிலர்க்கும் தங்கட்கும் தங்கிளைஞர்
யாவர்க்கும் கேடுசூ ழார்.

(பொ - ள்.) நலம் விற்று உணவுகொளும் பொன் தொடி நல்லார் - தமது இன்பத்தைப் பிறர்க்கு விற்று உண்டு பிழைக்கும் பொன்வளை யணிந்த பொதுமகளிர், கற்புஇல் மகளின் நனி நல்லர் - கற்பிலாத பெண்களினும் மிகவும் சிறந்தவர்களாவர். (ஏனெனில்) தம் கேள்வர்க்கும் - தம்மேல் அன்புடைய கணவர்க்கும், ஏதிலர்க்கும் - பிறர்க்கும், தங்கட்கும் - தங்களுக்கும். தம் கிளைஞர் யாவர்க்கும் - தம் சுற்றத்தார் அனைவருக்கும், கேடு சூழார் - அவ்விலைமகளிர் கேடு செய்ய நினையார்.

(வி - ம்.) பொதுமகளிர் கேடு சூழாரென்றமையின், கற்பிலாக் குலமகளிரால் இத்தனை கேடுகளும் வரும் என்பது சொல்லாமலே விளங்கும்,

பொற்றொடி : அன்மொழித்தொகை. நனி : உரிச்சொல் : கற்பிலா மங்கையரால் ஏற்படுங் கேடுகளைப்பற்றி, "பொருவில் கற்பின் வழீஇயபுன் மங்கையர், உரிய மூன்று மரபினுள் ளோரையும், வெருவந் தேங்க விழுங்கி யுமிழ்கலா, எரியுந் தீநர கிற்குடியேற்றுவார்" என்று வருங் காசிகாண்டச் செய்யுளும் இங்கு நினைவுகூரற்பாலது.

(க - து.) கற்பிலாப் பெண்களினும் பொதுமகளிர் நல்லவர்

### கற்பிலா மகளிரின் பிறப்பு

முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார்
நிறையும் நெடுநாணும் பேணார்—பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

(பொ - ள்.) முறையும் - தமக்கும் பிறர்க்குமுள்ள உறவு முறைமையும், குடிமையும் - தமது குடிப்பிறப்பின் தன்மையும், பான்மையும் - தமக்கும் பிறர்க்குமுள்ள தகுதியும், நோக்கார் - பாரார்; நிறையும் - மனம் தியவொழுக்கங்களில் செல்லாமல்) நிறுத்தும் தன்மையும், நெடு நாணும்-நீடிய நாணமும், பேணார் - பாதுகாவார்; பேதைமைக்கு - பேதைமையே கொண்ட பெண்களுக்கு, பிறிது ஒரு பெற்றியும் உண்டோ-இக் குணங்களல்லாமல் வேறு ஒரு குணமும் உண்டோ? (இல்லை); கற்பு இல் மகளிர் பிறப்பு பெரும் பாவம் (ஆதலால்) கற்பில்லாத பெண்களின் பிறப்புப் பெரிய பாவமாம்.

(வி - ம்.) நாணம் பெண்களுக்குரிய குணமாகையால் அது பெண்களோடு கூடவே பிறந்து கூடவே வளர்கின்றதென்பார், ஆதலின் நெடுநாண் எனப்பட்டது. நிறை-கற்புநெறி நிற்றல் : தொழிற்பெயர். நிறு : பகுதி, ஐ : விகுதி, பேதைமை : பண்பாகு பெயர். பான்மை - ஒருவனுக்கே யுரிமையாயிருத்தல்.

(க - து.) கற்பிலா மகளிர் பெரும்பாவமுடையராவர். (அ௫)

### துறவியர் காம நோக்குறாமை

பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணோடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணோடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

(பொ - ள்.) வீடு இல் புலம் பகையினர் - புலன்களுக்குப் பகைவராகிய கெடுதலில்லாத துறவிகள்; பெண்மை வியவார் - பெண்மை என்னுந் தன்மையைப் புகழ்ந்து கூறுர்; பெயரும் எடுத்து ஓதார்-பெண்ணென்னும் பெயரையும் எடுத்துரையார்; நெஞ்சு உறைப்ப கண்ணோடு நோக்கு உறுர் - நெஞ்சில் அவர்கள் உருவம் பதியுமாறு கண்களால் பெண்களைப் பார்க்கமாட்டார் கள்; பண்ணோடு பாடல் செவிமடார் - தம்மை வயப்படுத்தும் பொருட்டு அவர்கள் இசையோடு பாடும் பாடல்களுக்கும் செவி கொடார், பண்பு அல்ல - குணமற்றனவான பிற செயல்களையும், பாராட்டார் - பாராட்டமாட்டார்கள்.

(வி - ம்.) வீடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். புலப் பகை : வேற்றுமைத்தொகை. இச்செய்யுள் முதல், ஆசிரியர் இந் நூல் முடிவுவரை துறந்தோர் தன்மை கூறுகின்றுர்.

(க - து.) ஐம்புலனும் வென்ற துறவிகள் சிற்றின்பத்திற் குக் காரணமான காரியங்களில் ஈடுபடாதிருப்பர். (அ௫)

துறவிகளின் உணவு

துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம்
அயிற்சுவையின் ஆகுவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணுக் கோள்பபோற் கோள்ப பிறர்சிலர்போல்
மோத்துண மோய்ம்பி னவர்.

(பொ - ள்.) பிறர் சிலர்போல் - வேறு சிலர்போல, மொத் துண மொய்ம்பினவர் - ஐம்புல வின்பங்களால் அடிபடாத தவ வலிமையுடையோர், துயில் சுவையும் - தூக்கத்தின் இன்பமும், தூ நல்லார் தோள்சுவையும் - அழகிய பெண்களது தோளைத் தழுவும் இன்பமும், எல்லாம் - மற்றுமுள்ள எல்லா இன்பங்களும், அயில்சுவை இன் - உண்டியினுலுண்டாகும் இன்பத்தால், ஆகுவ என்று எண்ணி - வருவன என்று நினைத்து, அயில் சுவையும் - அவ்வுண்டி கொள்ளுதலையும், பித்து உண கொள்பபோல் கொள்ப - பித்தன் உணவு கொள்வதுபோல மிகச் சிறுகவே உண்பார்கள்.

(வி - ம்.) பித்தன் பசிக்கும்போது சிறிது உணவே கொள் வான். அதுபோல் துறவிகள் பசி காரணமாகச் சிறிது உணவே கொள்வார்கள். அயில் : முதனிலைத் தொழிலாகுபெயர். அயிற் சுவையும் என்னும் உம்மை ஏனைத் துயிற்சுவை முதலியனவும் குறைப்பரென்னும் பொருட்டு.

(க - து.) உண்டிமிகுந்தால் சிற்றின்ப எண்ணங்கள் மனத்தி லெழுமென்று துறவிகள் மிகவும் குறைவாகவே உண்பார்கள்.

### துறவிகள் உடம்போம்பாமை

அன்போ டருளுடைய ரேனும் உயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலாற்
போய்க்குடில் ஓம்புவரோ போதத்தால் தாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

(பொ - ள்.) போதத்தால் தாம் வேய்ந்த - ஞானத்தால் தாம் அமைத்த, புக்கில் - பேரின்ப வீட்டிலே, குடிபுகுதுவார் - குடிபுகுதற்குச் சித்தமாயிருப்பவர்கள், புன்புலால் பொய்க்குடில் ஓம்புவரோ - முடைநாறும் ஊன் பொதிந்த பொய்க் குடிசையாகிய தம்முடம்பைப் பாதுகாப்பரோ? (காவார்); (காவாதொழிவதால்) அன்பொடு அருள் உடையர் ஏனும் - அன்பும் அருளுமுடையவராயினும், உயிர்நிலை - உயிர்க்கு நிலைக்களமாகிய தம்முடல் (உணவில்லாமையால் மெலிந்து), என்பு இயக்கம் கண்டும் - எலும்புகள் தோன்றுவதைக் கண்டபோதுங்கூட, புறந்தரார் - (அவ்வூனுடம்பைப் பாதுகாவார்.

(வி - ம்.) ஒடு : பாட்டின் இசை நன்கமையவேண்டி வந்த இடைச்சொல். நிலை : வினையடியாகப் பிறந்த பகுபதப் பொருட்பெயர். புக்கில் - உரிய வீடு. புகுதுவார் - புகு: பகுதி, து : சாரியை. புறந்தரார் - புறந்தா : பகுதி.

(க - து.) பேரின்பமாகிய வீடுபேற்றை விரும்புகின்றவர்கள் சிற்றின்ப வீடாகிய உடம்பைப் பேணார். (அஎ)

### சிற்றின்பம் விரும்பாமை

சிற்றின்பம் சின்னீர தாயினும் அஃதுற்றோர்
மற்றின்பம் யாவையுங் கைவிடுப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.

(பொ - ள்.) சிற்றின்பம் சில் நீரது ஆயினும் - சிற்றின்பம் சிறுமையுடையதாயினும், அஃது உற்றோர் - அவ்வின்பத்திற்காளானோர், மற்று இன்பம் யாவையும் கைவிடுப - மற்ற எல்லா இன்பங்களையுங் கை விடுவார்கள்; பேரின்பம் மா கடல் - பேரின்பமென்னும் பெரிய கடலிலே, முற்றும் ஆடுவார் தாம் - எப்போதும் முழுகுபவர்கள்; பார் இன்பப் பாழ் கும்பியில் வீழ்பவோ - உலகவின்பமாகிய நரகத்தில் விழ்வரோ? (வீழார்.)

(வி - ம்.) கும்பி - சேறு. 'யானையு நரகமுஞ் சேறுங் கும்பி.' பிங்கலம். சிற்றின்பம் - சிறுமை இன்பம்; சில நீர என்பது.

சின்னீர - என்ருயிற்று. "சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய் யாரே, மற்றின்பம் வேண்டுபவர்" என்னுந் திருக்குறள் கருத்து இங்கு நினைவு கூரற்பாலது.

(க - து.) பேரின்பம் விரும்பினோர் சிற்றின்பத்தை விரும் பார்; சிற்றின்பம் விரும்பினோர் மற்றின்பமெல்லாங் கைவிடுவர். (அஅ)

### இணைவிழைச்சு அகற்றல்

எவ்வினைய ரேனும் இணைவிழைச்சொன் றில்லெனின்
தெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம்—அவ்வினை
காத்த லிலரேல் எனைத்துணைய ராயினும்
தூர்த்தருந் தூர்ப்பார் அலர்.

(பொ - ள்.) எவ்வினையரேனும் - துறவிகள் மற்றும் எவ் வகையான தீச்செயல்களைச் செய்தாலும், இணை விழைச்சு - மகளிரைச் சேர்ந்தின்புறுதல் என்னும், ஒன்று இல் எனின் - ஒரு தீத்தொழில்மட்டும் (அவர்களிடம்) இல்லாதிருந்தால், தெவ்வும்- அவர்களுடைய பகைவரும், திசைநோக்கிக் கைதொழூஉம் - (அவர்களிருக்குந்) திக்கைநோக்கித் தொழுவர், (அவ்வாறின்றி) எனைத்துணையர் ஆயினும் - அவர்கள் எத்தனை அறச்செய்கைக ளுடையவர்களா யிருந்தபோதிலும், அவ்வினை காத்தல் இல ரேல் - அத் தீத்தொழிலைக் காவாதவர்களாயின், தூர்த்தரும் - மகளிர் இன்பத்திலேயே மூழ்கிநிற்குங் காமுகரும், அலர் தூர்ப் பார் - அவர்களைப் பற்றிப் பழிமொழி கூறுவார்கள்.

(வி - ம்.) விழைச்சு : தொழிற்பெயர் ; தூர்ப்பார் ; பலர் பால் படர்க்கை வினைமுற்று. இணைவிழைச்சு - கூட்டம் ; இரு பாலரும் விரும்புதலின் இணைவிழைச்சு எனப்பட்டது. எவ்வினை யரேனும் என்றது, துறவிகள் விலக்கவேண்டிய தீச்செயல்களை; அவையாவன : கோபம், நிந்தை, பிச்சை வாங்குதல் முதலியன. தூர்த்தலாவது ஈண்டுப் பழியை மிகுதியாகப் பரப்புதல்; இச் சொல்லுக்கு இம் மிகுதிப் பொருளுண்மை "தூர்க்கின்ற மலர் மாரி" (இராவ, ககக) என்னும் கம்பர் வாக்கிற் காண்க. அலர் : தொழிலாகுபெயர்.

(க - து.) பெண்ணாசை அற்ற துறவிகளைப் பகைவரும் கை கூப்பி வணங்குவர் ; இன்றேல், அவர்களை யாவரும் பழிப்பர். (அகூ)

## பேதையர் செயல்

பரபரப்பி ேனாடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப—ஒருவாற்ருன்
நல்லாற்றில் நூக்கிற் பதறிக் குலேகுலேப
எவ்வாற்ருன் உய்வார் இவர்.

(பொ - ள்.) பலபல பரபரப்பினேடே செய்து-(உலகினர்) பல காரியங்களே விரைவாகச் செய்து, இரவு பகல் பாழுக்கு இறைப்ப-இரவையும் பகலேயும் வீணிற் கழிப்பர், ஒரு ஆற்ருல்-ஒரு வகையால், நல் ஆற்றில் - நல்லொழுக்க வழியில், நூக்கில்-(அறிவுடையோர் அவர்களேச் செலுத்தினுல், பதறிக்குலே குலேப - மெய் பதறி நடு நடுங்குவார்கள், இவர் - (இத்தகைய) இவர்கள், எவ்வாற்ருன் உய்வார் - பிறவிப் (பெருங்கடலினின் றும்) எந்தவழியாகத் தப்புவார்கள்?

(வி - ர.) நற்பயன் பெறுதற்குரிய தம் மனம் வாக்குக்காயங் களே உலகினர் இடையருமற் கீழ்மையான செயல்களிற் பயன் படுத்தி அழிதலின், 'இரவு பகல் பாழுக்கிறைப்ப' எனவும், அவ்வாறு பாழ்படுவாரை அறிஞர் நன்னெறிக்குத் திருப்ப முயன் ருல் அவர்கள் மனம் அதனே விரும்பாமையின் 'பதறிக் குலே குலேப' எனவுங் கூறினர். "வீழ்நாள் படாஅமை நன்ருற்றி னஃதொருவன், வாழ்நாள் வழியடைக்குங் கல்" என்னுந் திருக் குறள் இங்குப்பெரிதும் கருத்திருத்தற்பாலதாகும்.

(க - து.) உலகினர் தம் வாணுளே வீண் முயற்சிகளிற் கழிப்பர். (கo)

## தவம்

இளேயம் முதுதவம் ஆற்றுதும் நோற்றேன்
றுளேவின்று கண்பாடும் ஊழே—விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்

(பொ - ள்.) விளிவு இன்று - இளமையில் இறத்தலின்றி, வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் - தமது வாழ்நாள் நீண்ட கால எல்லேயினே உடையதாதல் அறிவரேல், இளேயம் - (நாம் இப்போது) இளேஞராயிருக்கிரும், முது - முதுமையில், நோற்று - வருந்தி, தவம் ஆற்றுதும் என்று - தவம் செய்வோம் என்று, உளேவு இன்று - வருத்தமில்லாமல், கண்பாடும் உறங்கிக் கிடப்பதும், ஊழே - ஒருகால் முறையேயாகலாம்; காண்பாரும்-தமது ஆயுள்நாள் முடிவைக் காணுந் துறவியரும், தாழாமே - நொடிப்பொழுதாயினுந் தாமதியாமல், தவம் நோற்பார் - தவஞ் செய்வார்.

(வி - ம்.) வரம்பு - எல்லை, முடிவு. உளைவு, விளிவு : வு விகுதி பெற்ற தொழிற்பெயர்கள். இளையம் : இளமை என்னும் பண்படியாய்ப் பிறந்த உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்று. விளிவின்று என்பதில் இன்றி என்னும் வினையெச்சம் செய்யுளாகலின் உகரத்திரிபாக வந்தது. நோற்று - நோல்; பகுதி, "நரைவருமென்றெண்ணி நல்லறிவாளர், குழவியிடத்தே துறந்தார்" என்னும் நாலடியார் இங்கு நினைவு கூர்தற்குரியது.

(க - து.) இறக்கு நாள் என்றென்று யார்க்குந்தெரியாதாகையால் உடனே தவஞ்செய்துகொள்ளுதல் மக்கள் கடன். (௬௧)

### தவத்தின் இயல்பு

நல்லவை செய்யத் தொடங்கினும் நோனுமே
அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும்—எல்லி
வியனெறிச் செல்வாரை ஆறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

(பொ - ள்.) எல்லி - இரவிலே, ஆறலைத்து உண்பார் - வழி பறிப்பவர்களாகிய திருடர்கள், வியல் நெறி செல்வாரை-மக்கள் போக்குவரவுடைய பெருவழியிற் செல்லும் வழிப்போக்கர்களை, செலவு - (அந்நெறியில்) செல்வதை, பிழைத்து - தப்புவித்து, உய்ப்பபோல் - மக்கள் நடமாட்டமில்லாத தனிவழியிற்கொண்டு செல்லுதல்போல், நல்லனசெய்யத் தொடங்கினும் - நற்காரியங்களைச் செய்யத் தொடங்கினாலும், அல்லன - தியூழானது, நோனுமே-(அது) பொறுமல், அல்லவற்றில் - தீய காரியங்களில், கொண்டு உய்க்கும் - கொண்டுபோய் விடும்.

(வி - ம்.) 'ஊழ்வலிது' என்பது இங்கு நோக்கற்பாலது. நோனுமே: எதிர்மறை வினையெச்சம். ஆ: எதிர்மறை யிடைநிலை. மே: விகுதி. எல்லி செல்வாரை: ஏழன் தொகை. "தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை, யஃதிலார் மேற்கொள் வது," "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந் துறும்" என்னும் திருக்குறள்கள் இங்கு நினைவு கூரற்பாலன.

(க - து.) நற்காரியங்களைச் செய்ய நினைத்தாலும் ஊழ்வினை மாறுயின் அவை தீய காரியங்களாகவே முடியும். (௬௨)

### கூடாவொழுக்கம்

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.

(பொ - ள்.) நெஞ்சு - தமது மனம் ; புறம்பு ஆ - புறத்திலே (கட்டுப்படாமல்) செல்ல, துறந்தார் - துறந்தவர்களுடைய, தவப்போர்வை - தவக்கோலமாகிய போர்வை, கஞ்சுகம் அன்று - சட்டையைப் போன்றதுமாகாது, (ஏனெனில்) கஞ்சுகம் - சட்டையானது, எப் புலமும் - எல்லாப் புலன்களையும், காவாமே - காக்காவிடினும், மெய்ப் புலம் - உடம்பாகிய புலனை மட்டுமாவது, காக்கும் - (பனி, குளிர் முதலியவற்றினின்று) காக்கும், (ஆனால்) இது-இந்தப்பொய்த்தவப் போர்வையானது, இப் புலமும் - இந்த உடம்பையும், காவாது - (குளிர், பனி முதலியவற்றினின்று காக்க மாட்டாது, பிறிது ஒன்றே - (ஆதலால் இப் பொய்த் தவக்கோலம்) வேறு ஒரு பொருளே.

(வி - ம்) மனத்தைப் புறஞ்செல்லவிட்டு மேலுக்கு மட்டும் துறந்தார்போல நடிப்பாரது துறவுக்கோலத்திற்கு ஓர் எளிய சட்டைக்கிருக்கும் பெருமைகூடக் கிடையாது என்றார். சட்டையாவது குளிரினின்று காக்கும்; இப் பொய்த்தவப் போர்வையோ அதுவும் செய்யாது; ஆகையால் இது வேறொரு பொருளே. துறந்தார் என்போர் எல்லாப் பற்றையும் அறவே நீத்தாராகையால் அவர்கள் மனம் ஒன்றிலும் பற்றுதல் கூடாது. ஏதாவது ஒரு காரியம் விரும்பிப் போகிறவன், அதற்குத் தகுதியான சட்டையணிந்து செல்லுதல்போல, மனமடக்காது கருத்திலே கரவு கொண்டாரது தவக்கோலமும் தீச்செயல் புரிதற்கென்று அணியப்படுவதுபோல் தோன்றலால், அது போர்வை என்றும், ஆனால் போர்வைபோல் அது பயன்படாமையால் போர்வையுமன்று பிறிதொரு பொருள் என்றுங் கூறினார். "நெஞ்சிற் றுறவார் துறந்தார் போல் வஞ்சித்து,வாழ்வாரின் வன்கணா ரில்" என்றது திருக்குறள்.

(க - து.) மனத்தைக் கட்டுப்படுத்தாத துறவிகளின் தவக்கோலத்தால் யாதும் பயனில்லை.

வஞ்சித்தொழுகல்

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கோல் என்றஞ்சி
அங்கம் குலைவ தறிவு.

(பொ - ள்.) வஞ்சித்து ஒழுகும் மதியிலிகாள் - (பொய்க் கோலம் பூண்டு) பிறரை வஞ்சித்து நடக்கும் மதியீனர்களே !, யாவரையும் வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - எல்லாரையும் நாம் வஞ்சித்துவிட்டோம் என்று நீங்கள் மகிழ்ச்சிகொள்ள

வேண்டாம், வஞ்சித்த - நீங்கள் வஞ்சித்தவற்றை, எங்கும் உளன் ஒருவன் காணும் என்று அஞ்சி - எங்கும் நிறைந்த இறைவன் காண்கின்றானென்று நடுங்கி, அங்கம் குலைவது - (உங்கள்) உடல் பதறுவதே, அறிவு - (உங்களுக்கு) அறிவாகும்.

(வி - ம்.) இறைவன் 'எங்குமிருக்கிறார், எல்லாம் அறிவார்' என்னும் உண்மை யறியாமையின், 'மதியிலிகாள்' என்றார். மனிதர் தண்டிப்பதிலும் இறைவன் தண்டனை கொடிதாகலின், 'அங்கங் குலைவ தறிவு' என்றார். மகிழன்மின்: எதிர்மறை ஏவற் பன்மை வினைமுற்று. வஞ்சித்த: இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். கொல்: அசைச்சொல். மதியாவது பொருளின் இயல்பை ஆராய்ந்து அளந்தறிவது.

(க - து) எங்கும் நிறைந்த இறைவன் அறியாத செயல் யாதுமில்லையாகையால், பிறரை வஞ்சித்தோம் என்று மகிழ வேண்டாம். (கச)

பழிமொழி பரத்தல்

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப்
புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ்
சென்றுதைக்கும் சேயார் முகத்து.

(பொ - ள்.) புன்புலால் கழிமுடை நாற்றம் - இழிவான இறைச்சியின் மிகுந்த கெட்ட நாற்றமானது, புறம் பொதிந்து மூடினும் - (அவ்விறைச்சியை ஒன்றிற் போட்டுப் பொதிந்து மூடி வைத்தாலும், சேயார் முகத்து சென்று தைக்கும் - வெகு தூரத்திலிருப்பவர்களுடைய முகத்திலும் போய்த் தாக்கும்; (அதுபோல) மறைவழிப்பட்ட பழிமொழி - மறைவில் நடந்த செயலால் வரும் பழிச் சொற்கள், தெய்வம் பறை அறைந்து ஆங்கு-இறைவன் பறைகொட்டி வெளிப்படுத்தினாற்போல், ஓடிப் பரக்கும் - விரைந்து சென்று எங்கும் பரந்துவிடும்.

(வி - ம்.) மறை: முதனிலைத் தொழிற்பெயர்; அஃது இவண் இடம் உணர்த்தலால் தொழிலாகு பெயர். சென்றுதைக்கும் என்பதைச் சென்று உதைக்கும் என்றும் பிரிக்கலாம். "தூர்த்த மங்கையர் சோர்வினிற் செய்பழி, வார்த்தை யெங்கணும் வல்லிதிற் செல்லல்போல்" என்பது கந்தபுராணம்.

(க - து.) மறைவில் நடந்திருப்பினும் பழிச்செயல்கள் விரைவில் வெளிப்படும். (கரு)

### மேலோர் செயல்

மெலியார் விழினும் ஒருவாற்ருன் உய்ப
வலியார்மற் றேன்ருனும் உய்யார்—நிலைதப்பி
நோய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமால் உய்யா பிற.

(பொ.-ள்.) *நிலைதப்பி* - நிலைதவறி, நொய்ய சழக்கென வீழாவாம் - கனமில்லாத பொருள்கள் விரைவில் விழமாட்டா, வீழினும் - ஒருவேளை விழுந்தாலும், உய்யும் - பிழைக்கும், பிற உய்யா - கனமான பொருள்கள் நிலைகெட்டு விழுந்தால் பிழைக்க மாட்டா, (அதுபோல) மெலியார் விழினும் - சிறியோர் தம் நிலையினின்று தவறினும், ஒரு ஆற்ருன் - ஒரு வழியாக, உய்ப - பிழைத்துக்கொள்வர், வலியார் - பெரியோர், (தம் நிலை தவறிஞல்) மற்ற ஒன்ருனும் - வேறு எந்த வகையாலும், உய்யார் - பிழைக்கமாட்டார்.

(வி - ம்.) மெலியார் வலியார் என்றது ஈண்டு முறையே இல்லறத்தாரையும் துறவிகளேயும் நோக்கிற்று. சிறியர் நிலைதவறின் அவர் கீழோராகையால் அவர் நிலைதவறினதை உலகம் நன்கறியாது; பெரியாரோவெனின், தங்நிலை கெட்டால் உலகெலாம் அது பரவும். ஆதலின், பின்பு அவர்கள் பெருமையடைதல் அரிது. "ஆடு படுத்தால் எழுந்திருக்கும், ஆனை படுத்தால் எழுந்திருக்குமா?" என்னும் பழமொழி இங்குக் கவனிக்கத் தக்கது. உய்ப: பலர்பால் எதிர்கால வினைமுற்று; நொய்ய: அஃறிணைக் குறிப்புப் பெயர். சழக்கென: உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; சழக்கென்பது பகுதி. 'நிலைதப' என்றும் பாடம்.

(க - நு.) மேனிலையிலுள்ளார் அந்நிலை தவறின் பின் ஒரு வழியானும் உய்தலரிது. (கசுசு)

இசையாத போலினும் மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லால்—பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யோப்பவே
ஊனேம்பி ஊன்றின் பவர்.

(பொ - ள்) மேலையோர் செய்கை - பெரியார் செய்கை, இசையாத போலினும் - (சில நேரங்களில்) பிறர் கொள்கைக்குப் பொருத்தமற்றனவா யிருந்தாலும், மற்றையோருக்கு அல்லால் - சிறியோர்க்கன்றி (அவர்போன்ற பெரியோர்க்கு), வசை ஆகா - குற்றமாகா; பசு வேட்டு - (உலகின் நலங்கருதிப்) பசுவைப்

படைத்து, தீ ஓம்பி - முத்தீ வேள்வி செய்து, வான் வழக்கம் காண்பாரை - மழைபெய்தலைச் செய்யும் வேள்வியாசிரியரை, ஊன் ஓம்பி - (தமது) உடம்பைப் பாதுகாக்க வேண்டி, ஊன் தின்பவர் - (வேறோர் உயிரின்) இறைச்சியைத் தின்பவர்கள், ஒப்பாவரோ? (ஆகார்).

(வி - ம்.) முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணுக்கினியம். வேட்டு: இறந்தகால வினையெச்சம்; வேள்: பகுதி; த்: இடைநிலை: ள், த், டகரமாதல் சந்தி: உ: விகுதி. பசு: வேள்விக்குரிய உயிர்களுக்குப் பொதுப்பெயர். மேலையோர் - முனிவர்.

"யானைமதப் பட்டா லலங்கார மாஞ்சிறுநாய்
தானுமதப் பட்டாற் சரியாமோ—ஞானி
தடைமீறி னூலுஞ் சரியாகும் கன்மி
நடைமீறில் ஆகாது காண்." —ஒழிவிலொடுக்கம்

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்." —திருவள்ளுவர்

(க - து.) பெரியோர் சில சமயங்களில் தீச் செயல்கள் புரிந்தாலும் அவற்றாலும் உலகுக்கு நன்மையே பிறக்குமாகையால் அவை பழிக்கப்படா. (கூஎ)

## ஞானி செயல்

எவரேவர் எத்திறத்தார் அத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி—எவரேவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென.

(பொ - ள்.) தம் உடையான் எப்பாலும் நிற்பது என - தம்மையாளுடைய இறைவன் சேர்ந்தும் சேராமலும் எங்கெங்கும் நிறைந்து நிற்பதுபோல், எம்முடையார் - எம்மை ஆளுந் தன்மையுடைய பெரியோர், எவர் எவர்க்கும் உப்பாலாய்-யாவர்க்கும் புறத்தாராய், எவர் எவர் எ திறத்தார்-யார் யார் எத்தன்மையராய் இருப்பரோ, அவர் அவர்க்கு அ திறத்தராய் நின்று - அவரவர் தன்மைக்கேற்பத் தாமும் நின்று, ஆவன கூறி - அவர்கள் செய்யவேண்டிய நற்காரியங்களை அவர்க்கெடுத்துச் சொல்லி, நிற்ப - தாம் யாதிலும் பற்றின்றி நிற்பார்கள்.

(வி - ம்.) திறம் - வகை; அவை: மந்தம், தீவிரம், தீவிரதரம் போல்வன. உப்பால், : சுட்டிடைச் சொல்.

(க - து.) பற்றற்ற துறவிகள் உலக நடையோடொழுகி உலகத்தாருக்கு நல்வழிகளை அறிவுறுத்திவந்தாலும் தாம் உலகப்பற்றின்றி நீங்கியே நிற்பர். (கஅ)

### மெய்யுணர்ந்தார்

மெய்யுணர்ந்தார் போய்ம்மேல் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார் —மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாணல் நீள்கதவாச்
சேர்ப்பர் நிறைத்தாழ் செறித்து.

(பொ - ள்.) மெய் உணர்ந்தார் - உண்மைப் பொருள்களை உணர்ந்தவர்கள், பொய் மேல் புலம்போக்கார் - பொய்ப்பொருள் களின் மேல் தம் புலன்களைச் செலவிடாது, மெய் உணர்ச்சி - மெய்யறிவு, கைவருதல் கண்ஆ - தமக்குக் கைகூட வேண்டு மென்பதே கருத்தாக, புலம் காப்பார் - ஐம்புலன்களையும் காப்பார், மெய்யுணர்ந்தார் - அம் மெய்யறிவாளர், காப்பே நிலைஆ - ஐம்புலன் களையும் காத்தலே நிலையாகவும், பழிநாணல் ஏ நீள் கதவு ஆ - பழிச் சொற்களுக்கு நாணுதலே நீண்ட கதவுகளாகவும் கொண்டு, நிறை - நிறையாகிய, தாழ் - தாழ்ப்பாளை, செறித்துச் சேர்ப்பார் - இறுக்கிப் பொருத்துவர்.

(வி - ம்.) நிறை - மனத்தை அதன் வழியில் விடாது நிறுத்தல். மெய்யுணர்ச்சியாவது பின்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் ஐயந்திரிபின்றி அறிதல். போக்கார் : முற்றெச்சம். கண்ணு நிலையா கதவா என்பவற்றின் ஈறு குறைந்து நின்றன. இச் செய்யுள் இயைபுருவகம். "சுவையொளி யூறோசை நாற்ற மென் றைந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு" என்னுந் திருக்குறள் இங்கு ஊன்றிக் கருத்திருத்துதற்குரியது.

(க - து.) உண்மைப் பொருள்களை உணர்ந்த பெரியோர் ஐம்புலன்களையும் அடக்கி மெய்யறிவு உண்டாகும் வழியில் நிற்பர். (கக)

### பேரின்பம்

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
இறந்தவெலாம் துன்பமலா தில்.

(பொ - ள்.) கற்று துறைபோய காதலற்கு - கற்க வேண்டிய நூல்களெல்லாங் கற்றுக் கற்றதற்குத் தக நிற்குங் கணவனுக்கு.

கற்பினுள் - கற்புள்ள மனைவி, பெற்றுக்கொடுத்த தலைமகன் போல் - பெற்றுக் கொடுத்த முதல்மகனைப்போல், முற்றத் துறந்தார்க்கு - இருவகைப் பற்றினையும் அறவே யொழிந்த துறவிகட்கு, மெய் யுணர்வில் தோன்றுவதே இன்பம் - அவர் களின் மெய்யுணர்வில் தோன்றுகின்ற இன்பமே மிகுந்த இன்ப மாகும், இறந்த எலாம் துன்பம் அலாது இல்-அஃதொழிந்த பிற வெல்லாம் (அவர்கட்குத்) துன்பமன்றி வேறில்லை.

(வி - ம்.) பிற்காலத்தில் தந்தைக்குரிய பொறுப்புக்களை ஏற்றுப் பணிபுரிதல் முதலியன முதன்மகனுக் குரித்தாதலின் 'கற்பினுள் பெற்றுக்கொடுத்த தலைமகன்' மிகவும் மதிக்கப்படு கின்றான். துறை - இங்கு வகை. இருவகைப் பற்று - உடல் என்னும் அகப்பற்றும், உடைமை என்னும் புறப்பற்றும். 'இறந்த வெலாந் துன்பமே யாம்' என்பதும் பாடம்.

(க - ரு.) முற்றுந் துறந்த முனிவர்கட்கு அவர்கள் மெய் யுணர்வில் தோன்றும் இன்பமே இன்பம். (க00)

நீணெறிச் சென்றார்

கற்றாங் கறிந்தடங்கித் தீதோரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார்.

(பொ - ள்.) கற்று ஆங்கு அறிந்து - அறிவு நூல்களைக் கற்று அவற்றின் மெய்ப்பொருளை உணர்ந்து, அடங்கி-அவற்றிற் கேற்ப அடக்கமாய், தீது ஓரீஇ - (அந்நூல்களில் விலக்கிய) தீய காரியங்களைக் கைவிட்டு, நன்று ஆற்றி - (அந்நூல்களில் விதித்த) நற்காரியங்களைச் செய்து, பெற்றது கொண்டு மனம் திருத்தி - கிடைத்ததைக் கொண்டு மனம் அமைந்து அதனை ஒரு வழிப் படுத்தி, பற்றுவதே பற்றுவதே பற்றி - தாம் அடைய வேண்டிய வீட்டு நெறியையும் அந் நெறிக்குரிய முறைகளையும் மனத்திற் கொண்டு, பணி அற நின்று - சரியை முதலிய தொழில் கள் மாள அருள் நிலையில் நின்று, ஒன்று உணர்ந்து - தனிப் பொருளாகிய இறைவனை அறிந்து, நிற்பாரே-நிற்கின்ற ஞானி யரே, நீள்நெறி சென்றார் - வீடடையும் வழியில் நின்றவராவர்.

(வி - ம்.) அறிவு நூல்களில் விலக்கிய தீயகாரியங்களாவன: காமம் கோபம் முதலியன; அவற்றின்கண் விதித்த நற்காரியங்க ளாவன: கொல்லாமை, வாய்மை முதலியன. ஓரீஇ: சொல் லிசையளபெடை. பற்றுவது இரண்டனுள் முன்னது வீட்டைப்

பற்றும் நெறி; பின்னது அந்நெறியைப் பற்றும் முறை; பற்றுவது : வினையடிப் பகுபதப் பெயர். பணியற நிற்றல் - முதற் பொருளோடு தான் அதுவென வேறுகாது நிற்றல்.

(க - து.) அறிவு நூல்களைக் கற்று அதன்படி நடந்து மனத்தை ஒருவழிப்படுத்தித் தனிப்பொருளாகிய இறைவனை உணர்ந்து நிற்பாரே வீடடைவர். (க0க)

முடிபொருள்

ஐயந் திரிபின் றளந்துத் தியில்தெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்—தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்.

(பொ - ள்.) அளந்து - மறை முடிவின் அளவைகளால் இறைவன், உயிர், பற்று இவற்றின் தன்மைகளை அளவு செய்து, ஐயம் திரிபு இன்று - அவற்றில் ஐயமும் திரிபுமில்லாமல், உத்தியில் தெளிந்து - கருத்தில் தெளிவுற்று, மெய் உணர்ச்சி கண் விழிப்ப - மெய்யறிவாகிய கண் விழித்து, தூங்குவார் - அறிவுத் துயில் செய்வார், தம் உள்ளே - தம் உள்ளத்தில், காண்பதே காட்சி-காணுங் காட்சியே காட்சியாகும், கனவு - (அந்த ஞானத் துயிலிற் காணும்) கனவை, நனவாக - விழிப்பு நிலையாக, பூண்பதே-அடைவதே; தீர்ந்த பொருள்-முடிந்த நிலையாகும், (சித்தாந்தமாகும்.)

(வி - ம்.) ஐயமாவது-இறைவன் உளனோ இலனோ என்னும் ஐயப்பாடு. திரிபு - ஒற்றை மற்றொன்றாகக் கருதும் அறிவு மயக்கம். நனவு - விழிப்பு; வாழ்க்கை, கனவு நனவாகப் பூண்பது - அறிவு நிலையிற் காணப்பட்ட நுண்ணிய நுகர்வை வாழ்க்கை நிலையினுங் கண்டு நிற்றல், என்றது. ஈண்டும் இறைபணி நிற்றலென்பது' மெய்யுணர்ச்சியின்கண்- அகக்கண்; மனம் பதி முதலியவற்றை உள்ளவாறுணர்ந்த அறிவு. இன்றி என்னும் வினையெச்சம் செய்யுளில் இன்று என வந்தது. கண் விழிப்பத் தூங்குவார் என்பதற்கு அருள்நிலையில் விழிப்பும் உலக நிலையில் துயிலுமுடையார் என்க.

(க - து.) மெய்யுணர்வு பெற்று இறைவனோடு ஒற்றுமையுற நிற்பவரே வீடுபேற்று நெறியில் ஒழுகும் ஞானியராவர். (க0உ)

நீதிநெறி விளக்கம் உரை

முற்றும்

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

---